# ஆனந்தகிரி சங்கர விஜயத்தில் ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ மடம்

போலகம் சாஸ்த்ரரத்னாகர
ஸ்ரீராம சாஸ்திரிகள்







ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் வெளியீடு—2

# ஆனந்தகிரி சங்கரவிஜயத்தில் ஸ்ரீகாஞ்சீ ஸ்ரீமடம்

போலகம் சாஸ்த்ரரத்னாகர
ஸ்ரீராம சாஸ்திரிகள்



ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் வெளியீடு
4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை - 1.
1961

50 - பைசா

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஆனந்தகிரி சங்கரவிஜயத்தில் ஸ்ரீ காஞ்சீ ஸ்ரீ மடம்

## (1)

உலகில் தற்காலம் எக் காரணத்தாலோ அதிக ப்ரஸித்தியை அடைந்துவிட்ட மாதவீய சங்கரவிஜயம் முதலியவற்றுக்கு, வ்யாஸாசலீய சங்கரவிஜயம் போலவே, மூலஸ்தானம் வஹிப்பது ஆனந்தகிரீய சங்கரவிஜயம் என்பது ஆக்ஷேபமில்லாத விஷயம். மாதவீயத்திற்கு ஆனந்தகிரீய சங்கரவிஜயம் மூலம் என்னும் விஷயம் மாதவீய வ்யாக்யானங்களான டிண்டிமம், அத்வைத ராஜ்யலக்ஷ்மீ என்கிற க்ரந்தங்களில் பல இடங்களில் கூறப்பட்டிருக்கிறது. இந்த விஷயம் காமகோடி ப்ரதீபம், 1-ஆம் மலர், 2-ஆம் இதழில் 'மாதவீய சங்கரவிஜயம்' என்ற வ்யாஸத்தில் கூறியுள்ளோம். ப்ராசீன சங்கர விஜயம் என்றும் ப்ருஹத் சங்கரவிஜயம் என்றும் ஆனந்தகிரீய சங்கரவிஜயத்தை மாதவீயமே கூறுகிறது.

மாதவீயமானது பதஞ்ஜலிசரிதம், சங்கராப்யுதயம், வ்யாஸாசலீயம் என்ற மூன்று பழைய க்ரந்தங்களிலுள்ள பல ச்லோகங்களைப் பல இடங்களில் அப்படியே அநுவதித்திருப்பது போலவே ஆனந்தகிரீயத்திலுள்ள ச்லோகங்களையும் அதில் உள்ளபடியே அநுவதிக்கின்றது. அதைக் கூறுவோம்—

ஆனந்தகிரீயத்தில் மூன்றாவது ப்ரகரணத்திலுள்ள—

वेदे ब्रह्मसमस्तदङ्गनिचये गर्गोपमस्तत्कथा-
तात्पर्यार्थविवेचने गुरुसमस्तत्कर्मसंवर्णने ।
आसीज्जैमिनिरेव तद्वचनजप्रोद्बोधकन्दे समो
व्यासेनैव मदीयसद्गुरुरसौ श्रीशंकराख्यः क्षितौ ॥

என்ற ஆசார்யவர்ணன ச்லோகமானது மாதவீயம் 4-ஆம் ஸர்கத்தில் 19-ஆம் ச்லோகமாக எழுதப்பட்டிருக்கிறது. அதில் 4-ஆம் பாதத்தில் மாத்திரம் '**व्यासेनैव स मूर्तिमानिव नवो वाणीविलासैर्वृतः**' என்று பாட பேதம் செய்யப்பட்டிருக்கிறது.

ஆனந்தகிரீயம் 52-ஆம் ப்ரகரணத்தில் வ்யாஸாசார்யருக்கும் சங்கராசார்யருக்கும் வாதம் நடக்கும் ஸமயத்தில் பத்மபாதாசார்யர் சொன்னதாக ஒரு ச்லோகம் இருக்கிறது—

शंकरश्शंकरस्साक्षात् व्यासो नारायणः स्वयम् ।
तयोर्विवादे संप्राप्ते किंकरः किं करोम्यहम् ॥

என்று. இந்த ச்லோகத்திலுள்ள பதங்களையும் அர்த்தங்களையுமே மாதவீயத்தில் அநுவதித்து வேறு வ்ருத்தத்தில்,

त्वं शंकरश्शंकर एव साक्षात् व्यासस्तु नारायण एव नूनम् ।
तयोर्विवादे सततं प्रसक्ते किं किंकरोऽहं करवाणि सद्यः ॥

என்று ஒரு பத்யம் எழுதப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்தில் 59-ஆம் பீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீ பகவந் நாம போதேந்த்ரர் தாம் செய்த நாமாம்ருத ரஸோதயத்தின் 6-ஆம் உல்லாஸத்தில்

'शंकरश्शंकरस्साक्षादित्यभियुक्तोक्तैः भगवत्पादाचार्यैः' என்ற வாக்யத்தால் ஆனந்தகிரீயத்திலுள்ள 'ஶங்கரஶ் ஶங்கரஸ் ஸாக்ஷாத்' என்ற ச்லோகத்தை அநுவதிக்கிறார்.

ஆனந்தகிரீயம் 56-ஆம் ப்ரகரணத்தில் ஆசார்யருக்கு மண்டன்மிச்ருடைய வீட்டுப் பணிப் பெண்கள் அவருடைய வீட்டின் அடையாளம் கூறும் ச்லோகங்களில்,

'शुकाङ्गना यत्र गिरं वदन्ति। द्वारे तु नीडान्तरसंनिरुद्धा ह्यवेहि तन्मण्डनमिश्रधाम।'. என்றுள்ள பாகங்களையே மாதவீய க்ரந்தகாரர் 'कीराङ्गना यत्र गिरं गिरन्ति। द्वारस्थनीडान्तरसंनिरुद्धा जानीहि तन्मण्डनपण्डितौकः।' என்று 8-ஆம் ஸர்க்கத்தில் 6, 7, 8 என்ற எண்ணிக்கையுள்ள ச்லோகங்களில் சிறிய மாறுதலுடன் அநுவதித்திருக்கிறார்.

ஆனந்தகிரீயம் 56-ஆம் ப்ரகரணத்திலுள்ள 'आगलान्मुण्डी, सुरा पीता वा नहि नहि श्वेता' என்ற ஆசார்ய மண்டனமிச்ர ஸம்வாத ரூபங்களான வாக்யங்களையே மாதவீயம் 'कुतो मुण्ड्यागलान्मुण्डी', 'अहो पीता किमु सुरा नैव श्वेता' என்ற 16, 18 முதலிய ச்லோகங்களால் 8-ஆம் ஸர்க்கத்தில் அநுவதிக்கிறது. இவ்விதமே கத்யரூபமான ஆனந்தகிரீயத்திலுள்ள பல கதாபாகங்களையும் பல அர்த்தங்களையும் மாதவீயம் பல இடங்களில் அநுவதிக்கிறது. ஆகையால் அதற்கு ஆனந்தகிரீயம் மூலம் என்பதில் ஆக்ஷேபமே இல்லை.

ச்ருங்ககிரி மடத்துக் குரு பரம்பரையைக் கூறுவதற்காகவே ஏற்பட்ட குருவம்ச காவ்யத்தின் முதல் ஸர்க்கத்தில் 6-ஆம் ச்லோகம் 'आर्याणां कुलमुपदर्शितं कवीन्द्रैः' என்பது. அதற்கு மூலகாரரே வ்யாக்யானம் செய்த பொழுது 'कवीन्द्रैः-आनन्दगिरियतीन्द्रादिभिः' என்று கூறப்பட்டிருப்ப

தாலும் ஆனந்தகிரீயத்தை அநுஸரித்தே மேல் கதாபாகம் அங்கே கூறப்படுவதாலும் ஆனந்தகிரீயம் குருவம்ச காவ்யத்திற்கும் மூலமாக இருப்பதால் ஆனந்தகிரீயத்தின் ப்ராமாண்யத்தில் ஒருவருக்கும் ஆக்ஷேபம் இருக்கமுடியாது.

ஆனந்தகிரீய சங்கரவிஜயம் எழுதியவர் அனந்தானந்த கிரி என்ற யதிச்ரேஷ்டர். பகவத்பாதரின் சிஷ்ய பரம்பரையில் வந்தவர். 'अनन्तानन्दगिरिरहं अप्रतिहताज्ञस्य भगवतः शिष्यः स्वगुरोरवतारप्रयोजनं वर्णयामि' என்று க்ரந்தாரம்பத்திலேயே இவ் விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த க்ரந்தம் கத்யரூபமாயுள்ளது. நடுவில் சிற்சில ச்லோகங்களும் உண்டு. இதில் ச்லோகங்கள் அதிகமில்லாமையால் தான், ச்லோக ரூபமாக எழுதப்பட்ட மாதவீயத்தில், வ்யாஸாசலீயம், சங்கராப்யுதயம், பதஞ்ஜலி சரிதம் இவற்றிலிருந்து அதிகமான ச்லோகங்கள் அநுவதிக்கப்படுவது போல், ஆனந்தகிரீயத்திலிருந்து மாதவீயத்தில் அதிகம் அநுவதிக்கப்படவில்லை.

இந்த ஆனந்தகிரீயத்தில் 74-ப்ரகரணங்கள் இருக்கின்றன. இந்த ஆனந்தகிரீய புஸ்தகம் அச்சுப் போடாமல் கையெழுத்து ப்ரதியாக இன்றைக்கும் காசி முதலிய வட தேசத்திலும் சென்னை முதலிய தென் தேசத்திலும் பல லைப்ரரிகளில் இருக்கிறது. காசியில் தாரக மடத்திலுள்ள ஆனந்தகிரீய சங்கரவிஜயத்தின் கையெழுத்துப் புஸ்தகம் ப்ராசீனமானது. அது 1737-ஆவது சாலிவாஹன சகவர்ஷத்தில் எழுதப்பட்டது. இப்பொழுது கத சாலிவாஹன சகவர்ஷம் 1882. ஆகவே 145-வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட புஸ்தகம் அது என்று நிச்சயிக்கப்படுகிறது. கல்கத்தாவில் ஸாரஸுதாநிதி யந்திராலயத்தில் ஸ்ரீ ஜீவானந்த வித்யாஸாகர பட்டாசார்யரால் பரிசோதிக்

கப்பட்டு, கி. பி. 1881-ஆம் வருஷத்தில் அச்சிடப்பட்ட ஓர் ஆனந்தகிரீய சங்கரவிஜய புஸ்தக ப்ரதியும் உண்டு. அது இன்றைக்கு 80-வருஷங்களுக்கு முன் அச்சிடப்பட்டிருக்கிறது. முந்திய கையெழுத்துப் புஸ்தகங்களிலும் பிந்திய அச்சுப் புஸ்தகத்திலும் சிற்சில இடங்களில் அதாவது 8-இடங்களில் பாடபேதம் காணப்படுகிறது. இன்ன இன்ன இடங்களில், இப்படி இப்படியாகப் பாடங்கள் மாற்றப்பட்டிருக்கின்றன என்பதை முதலில் காட்டுவோம். பழைய கையெழுத்து ப்ரதி பாடத்தை முந்தியும், புதிய அச்சு ப்ரதி பாடத்தைப் பிந்தியும் காட்டுவோம்.

(1) ஆனந்தகிரீய சங்கரவிஜயத்தில், குருவின் அவதார வைபவம் கூறும் இரண்டாம் ப்ரகரணத்தில் பழைய கையெழுத்துப் புஸ்தகங்களில் ஆசார்யரின் அவதாரம் எல்லாச் சங்கரவிஜயங்களைப் போலவே, ஆசார்யாள் கேரள தேசத்திலுள்ள காலடி என்ற கிராமத்தில் வித்யாதிராஜரின் குமாரரான சிவகுருவிற்கு ஆர்யாம்பாளிடம் ஜனித்ததாகத்தான் 19-ச்லோகங்களால் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

इति संबोधितो ब्रह्मा प्रणिपत्य महेश्वरम् ।
सगणः प्राप सत्याख्यं निजलोकं पितामहः ॥ १ ॥

कालट्याख्ये ग्रामवर्ये केरलानामलंकृते ।
विद्याधिराजनाम्नो यः प्राज्ञश्शिवगुरुर्बभौ ॥ २ ॥

ततस्सदाशिवश्शम्भुर्लोकानुग्रहतत्परः ।
तपोमहिम्ना तत्पत्न्यां प्रविवेश स्वतेजसा ॥ ३ ॥

सा दधार सती गर्भं आदित्यसमतेजसम् ।
व्यजायत शुभे काले पञ्चोच्चग्रहसंयुते ॥ ४ ॥

अनन्दन् बान्धवास्सर्वे पुष्पवर्षैर्दिवश्च्युतैः ।
शंभोर्वरमनुस्मृत्य पिता शिवगुरुः किल ॥ ५ ॥

आयुषो ह्रस्वतां जानन्नपि नोवाच किंचन ।
सर्वज्ञत्वादिसुगुणान् शंभूक्तांस्तस्य संस्मरन् ॥ ६ ॥

तेजसा तस्य च शिशोश्शिशौ गेहोदरस्थिते ।
नैशं तमो निववृते तदद्भुतमिवाभवत् ॥ ७ ॥

स्त्रियो विप्राश्च शूद्राश्च बाला वृद्धास्तथा परे ।
तं संजातमभिप्रेक्ष्य शंभुरित्येव मेनिरे ॥ ८ ॥

सद्यः पुष्पफलाकीर्णास्तरवस्सर्वतोऽभवन् ।
नकुलाहिश्वहरिणसिंहदन्तावलादयः ॥ ९ ॥

अन्योन्यवैरमुत्सृज्य शेमुश्शामधना इव ।
आयाताः प्रेक्षितुं सर्वे तं सुपर्वमहौजसम् ॥ १० ॥

जना जनपदात्तस्मादुत्तमाधममध्यमाः ।
सौगतस्य करात्तत्र कस्यचिज्जनसंसदि ॥ ११ ॥

प्रभ्रष्टमपतद्भूमौ पुस्तकं तन्मतार्चितम् ।
वेदवेदान्तविषया वादास्तु बहवोऽभवन् ॥ १२ ॥

प्रसेदुश्च दिशस्सर्वास्सलिलं विमलं बभौ ।
वेदव्यासस्य हृदयमभीष्टार्थसमुद्भवात् ॥ १३ ॥

प्रहर्षमतुलं लेभे विनियोगविदो गिराम् ।
तस्य शंकर इत्याख्यां चक्रे शिवगुरुस्ततः ॥ १४ ॥

तामन्वर्थां समालोच्य जहृषुः परमर्षयः ।
दिनैः पक्षैश्च मासैश्च वर्षैश्च ववृधे सुतः ॥ १५ ॥

पञ्चवर्षस्य वर्णादिग्रहणेनास्य धीमतः ।
उपनीतिमकृत्वैव ममार महितः पिता ॥ १६ ॥

तस्यौर्ध्वदेहिकं साध्वी चकार ज्ञातिभिस्समम् ।
अथोपनाययामास माता तनयमात्मनः ॥ १७ ॥

सदाचारवतो गोत्रजन्मनैव विपश्चितः ।
चतुरोऽधिजगे वेदान् पञ्चमाब्दे स धीरधीः ॥ १८ ॥

शास्त्राण्यपि च सर्वाणि बाल एव व्यगाहत ।
चकार मातृशुश्रूषामतिमानुषकर्मकृत् ॥ १९ ॥

**इत्यनन्तानन्दगिरिकृतौ आचार्यविजये गुर्ववतारकथाप्रकरणं नाम द्वितीयम् ।** *என்று.*

## ॥ अथ तृतीयं प्रकरणम् ॥

'इत्थं विचित्ररूपतेजोगुणगांभीर्यादियुक्तः शैशवेऽपि प्राकृतमागधीगीर्वाणादिसर्वभाषाकुशलः सरस्वतीविलास इवापूर्वः शंकरस्समवर्तत। सर्वविद्याप्रपंचतः प्रपंचातीत इव सम्यग्ज्ञानवशात् जीवन्मुक्त इव किल अनालस्यादभवत् भगवानाचार्यः॥' என்று மூன்றாவது ப்ரகரணம் ஆரம்பிக்கிறது. இவ்விதம் பழைய புஸ்தகங்கள் இருக்க, புதிய அச்சு ப்ரதியில் ஆசார்யரின் அவதாரமானது ஒரு சங்கரவிஜயத்திலும் இல்லாத புதிய ரீதியில் கூறப்பட்டிருக்கிறது. அதாவது— 'சிதம்பரத்தில் இருந்த ஸர்வஜ்ஞர் - காமாக்ஷி என்ற தம்பதிகளின் புத்ரியான விசிஷ்டை என்பவள், தன் பர்த்தாவான விச்வஜித் என்பவர் தபஸ்ஸுக்காகக் காட்டிற்குப் போன பிறகு, தனியாக ஸ்வயம் தபஸ் பண்ணிக்கொண்டு இருக்க நடராஜர் அவளுக்கு அநுக்ரஹம் செய்யக் கருதி அவளுடைய உதரத்தில் பிரவேசித்துச் சங்கரர் என்ற புத்ரனாகத் தோன்றினார். பிராம்மணோத்தமர்கள் அவருக்கு ஜாத கர்மம் முதலிய ஸகல ஸம்ஸ்காரங்களையும் செய்தார்கள்' என்று. இவ்விதம் கதையை 15 ச்லோகங்களால் கல்பித்துப் பழைய 19 ச்லோகங்களை எடுத்துவிட்டு இந்தப் புதிய 15 ச்லோகங்கள் அச்சிடப்பட்டிருக்கின்றன. அவை வருமாறு:—

इति संबोधितो ब्रह्मा प्रणिपत्य महेश्वरम्।
सगणः प्राप सत्याख्यं निजलोकमनन्यधीः॥ १॥
ततस्सर्वात्मको देवश्चिदंबरपुराश्रितः।
आकाशलिङ्गनाम्ना तु विख्यातोऽभून्महीतले॥ २॥

तत्र विद्वन्महेन्द्रस्य कुले द्विजगणाश्रिते ।
जातस्सर्वज्ञनाम्ना तु कश्चित् द्विजकुलेश्वरः ॥ ३ ॥

कामाक्षीति सती चाभूत् तस्य लक्षणलक्षिता ।
चिदंबरेश्वरं नत्वा तावुभौ प्रापतुस्सुताम् ॥ ४ ॥

सा कुमारी सदा ध्यानसक्ताभूत् ज्ञानतत्परा ।
विशिष्टेति च नाम्ना तु प्रसिद्धाभून्महीतले ॥ ५ ॥

तामष्टमेऽब्दे विप्राय शान्तायाद्भुतकर्मणे ।
प्रददौ विश्वजिन्नाम्ने सर्वज्ञोऽस्याः पिता स्वयम् ॥ ६ ॥

सा तदा पतिमद्वैतं ध्यात्वाऽऽकाशात्मकं शिवम् ।
तस्याराधनमत्युग्रमाचकार विवेकिनी ॥ ७ ॥

तादृशीमपि संत्यज्य ययौ विश्वजिदद्भुतम् ।
अरण्यं तपसे कृत्वा मनो निश्चलतां गतम् ॥ ८ ॥

तदाप्रभृति सा नारी चिदंबरमहेश्वरम् ।
तोषयामास पूजाभिर्ध्यानैरात्मगतैस्सदा ॥ ९ ॥

स देवस्सर्वपूर्णोऽपि तस्या वदनपंकजम् ।
प्रविश्य विस्मितान् कुर्वन् जनानन्यान् समागतान् ॥ १० ॥

महोग्रतेजसा जुष्टा विशिष्टाभूद्यथाम्बिका ।
सर्वैस्संपूजिता नित्यं पित्रादिभिरुपाश्रिता ॥ ११ ॥

अतीते मासि गर्भस्य वृद्धिरासीद्दिनेदिने ।
चिदंबरेश्वरं कृत्वा यजमानं द्विजोत्तमाः ॥ १२ ॥

तृतीयादिषु मासेषु चक्रुः कर्माणि वेदतः ।
प्राप्ते तु दशमे मासि विशिष्टागर्भगोलतः ॥ १३ ॥

प्रादुरासीन्महादेवश्शंकराचार्यनामतः ।
आसीत्तदा पुष्पवृष्टिः देवसंघैः प्रचोदिता ॥ १४ ॥

नेदुर्दुन्दुभयो दिव्याः स्वर्गलोके चिरं सुखम् ।

**इत्यनन्तानन्दगिरिकृतौ आचार्यविजये गुर्वेवतारकथाप्रकरणं द्वितीयम् ॥** என்று,

## ॥ अथ तृतीयं प्रकरणम् ॥

**'विचित्ररूपतेजोगुणगांभीर्यादियुक्तः शैशवेऽपि प्राकृतमागधीगीर्वाणादिसर्वभाषाकुशलः सरस्वतीविलास इव समवर्तत। तृतीये वर्षे चौलकर्म पञ्चमे वर्षे मौञ्जीबन्धं विध्युक्तितश्चक्रुर्विप्रौघाः। तदनु विद्यागुरुसमीपे सकृच्छ्रवणादेव अवगतसर्वविद्याप्रपञ्चातीत इव सम्यग्ज्ञानवशात् जीवन्मुक्त इव किल अनालस्याद्भवद्भगवान् श्रीमदाचार्यः।'** என்று மூன்றுவது ப்ரகரணம் அச்சு ப்ரதியில் இரண்டாவது ப்ரகரணத்தில் கல்பித்த கதைக்கு அநுகுணமாக ப்ராம்மணர்கள் சௌளம் முதலியவற்றைச் செய்தார்கள் என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் புது மாதிரியான பொருத்தமில்லாத ஆசார்ய ஜனனத்தைக் கல்பித்து, அதற்கு அநுகுணமாகப் புதிய ச்லோகங்களையும் கல்பித்து அச்சிட்டவர்கள் ஆசார்யரிடத்தில் எவ்வளவு பக்தியுள்ளவர்கள் என்பது வாசகர்கள் புரிந்து

கொள்ளக் கூடியதே. அதை விவரிக்க வேண்டிய அவச்யமில்லை. ஆனந்தகிரீயத்தில் ஆசார்யரின் ஜனனவிஷயமான வரலாறு அச்சுப் போட்ட புஸ்தகத்தில் இருக்கிறபடியே உண்மையானால், ஆனந்தகிரீயத்தை அநுஸரித்து மாதவீயம் ஏற்பட்டது என்று மாதவீய வ்யாக்யானங்களில் கூறப்பட்டிருப்பதாலும், ஆனந்தகிரீயத்தை அநுஸரித்தே தாம் க்ரந்தம் செய்வதாக குருவம்ச காவ்யத்தில் சொல்லப்பட்டிருப்பதாலும், மாதவீயம் குருவம்ச காவ்யம் இரண்டிலும் ஆசார்யரின் ஜனனம் சிதம்பரத்தில் ஏற்பட்டதாகச் சொல்லியிருக்க வேண்டும். அப்படி அதில் சொல்லாமல் காலடியில் ஜனனம் என்றே சொல்லியிருப்பதால் பழைய கையெழுத்துப் புஸ்தகங்களிலுள்ள பாடமே ஆனந்தகிரி எழுதியது; புதிய பாடம் அச்சுப் போட்டவர்கள் வேண்டுமென்றே கல்பித்தது என்று வாசகர்கள் தீர்மானிக்கலாம்.

இவ்விதம் அச்சுப் போடப்பட்ட ஆனந்தகிரீய புஸ்தகம், **'प्रणव एव विस्वरः'** என்ற ரீதியில் முதலிலேயே கோணலாய் ஏற்பட்டதுபோல் முற்றிலும் கோணலாகவே அமைந்திருக்கிறது என்ற விவரத்தை இனி விளக்குவோம்.

(2)

ஏராளமான பணம் செலவழித்து ஆனந்தகிரீய சங்கர விஜயத்தை அச்சிட்ட பண்டிதமன்யர்கள், அதில் அபத்த பாடங்களைப் புகுத்தினர்கள்; பரிசுத்தமான ப்ராசீன பாடங்களை மாற்றி, விசுவாமித்திர ச்ருஷ்டி செய்தார்கள்; தாழை முள் போல உள்ளத்திலே உறுத்திக்கொண்டிருந்த பொருமையால் காஞ்சி ஸ்ரீமடத்தைப் பற்றிய செய்தியையே மறைத்தார்கள். இது முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைத்த கதையாக முடிந்தது.

பூனை கண்ணை மூடிக்கொண்டதனால் பூலோகம் அஸ்தமித்துவிடுமா? யாரோ சிலர் நல்ல பாடங்களை மாற்றித் தான்தோன்றித்தனமாக ஒரு நூலை வெளியிடுவதனால், நாட்டிலுள்ள பழைய ப்ரதிகள் மறைந்துபோகுமா? இருளில்தான் நிசாசரர்களின் நடமாட்டம்; உண்மைச் சூரியன், தோன்றியதுமே பொய்ப் பேய்கள் ஓட்டம் பிடிக்க வேண்டியதுதான்! பணத்தினால் பாடங்களை மாற்றினாலும், உண்மை வரலாற்றை ஒளிக்க முடியுமா?

பிரணவத்தையே அபஸ்வரமாக உச்சரிப்பவனுடைய வேதாத்தியயனம் எப்படி இருக்கும். அப்படித்தான் இருக்கிறது, இந்த ஆனந்தகிரீயத்தை வெளியிட்டவர்களின் நிலை. 'ப்ராசீன சங்கர விஜயம்' என்றும், 'ப்ருஹத் சங்கர விஜயம்' என்றும் மாதவீயமே போற்றும் பெருமை வாய்ந்தது ஆனந்தகிரீய சங்கர விஜயம். மாதவீயத்துக்கு இதுவும் ஒரு மூலக்ரந்தம்.

ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர் காலடியில் அவதரித்த வைபவத்தை மாதவீயமும் குருவம்ச காவ்யமும் குறித்திருப்பதையும், ஆனந்தகிரீயத்தில் இந்த நிகழ்ச்சி மிகவும் அழகாக வர்ணிக்கப்பெற்றிருப்பதையும் இதற்கு முன்பு விவரித்தோம். இந்த நிகழ்ச்சியை மாற்றிக் கூறி, பகவத்பாதர் சிதம்பரத்தில் அவதரித்ததாகக் கதை கட்டிப் புதிய பாடத்தைச் சிலர் வெளியிட்டார்கள் என்பதையும் சொன்னோம். 'ஆசாரியர் சிதம்பரத்தில் ஜனித்தார்' என்று கூறியவர்கள், இன்னும் எவ்வளவு இடங்களில் இந்த க்ரந்தத்தை அலங்கோலமாக்கினார்கள் என்பதை இப்பொழுது பார்ப்போம். இவர்களுடைய புஸ்தகம் எந்த மூலை முடுக்குகளிலே கிடந்தாலும், காசி தாரக மடத்திலுள்ள சுத்தமான பழைய கையெழுத்து ப்ரதியையும், சென்னை

மானுஸ்கிருப்ட் லைப்ரரியிலுள்ள (புராணம் 53-14 என்ற எண்ணுள்ள) கையெழுத்து ப்ரதியையும் இவர்கள் அழிக்க முடியாது. இப்படி நல்ல ப்ரதிகள் பலவற்றை ஆதாரமாகக் கொண்டே நாம் இந்த ஆராய்ச்சியை நடத்துவதனாலும், இவர்களுடைய பித்தலாட்டங்கள் அம்பலத்துக்கு வருவதனாலும், உண்மை ஜகஜ்ஜோதியாக இப்பொழுது பிரகாசிப்பதனாலும் ஆந்தைகள் யாவும் பதுங்கி விழிப்பதாகத் தெரிகிறது. ஸ்ரீ காஞ்சீ பீடத்தின் மகிமையை மக்கள் நன்கு அறிந்து, ஆசார்ய ஸ்வாமிகளிடம் பக்தியை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதே நமது ஆராய்ச்சியின் நோக்கம்.

பகவத்பாதர் காஞ்சியில் காமாக்ஷி ஸந்நிதியில் ஸ்ரீசக்ரப் பிரதிஷ்டை செய்து, தாம் வசிக்க யோக்யமான ஸ்ரீமடம் ஒன்றையும் இந்தப் புண்ணிய நகரத்தில் நிறுவி, தம்முடைய ப்ரியசிஷ்யரான ஸுரேச்வராசார்யரை இங்கு நியமித்து, அவரிடம் யோகலிங்கத்தைப் பூஜிக்கக் கொடுத்து, அவரைக் காமகோடி பீடத்தில் வஸிக்கும்படி ஆஜ்ஞாபித்தார் என்றும், அங்கேயே சிஷ்ய ஜனங்கள் பணிந்து வழிபட ஆசாரியர் சுகமாக வசித்தார் என்றும் ஆனந்தகிரீயம் (65-ஆம் ப்ரகரணம்) கூறுகிறது. புதிய பாடத்தை ச்ருஷ்டித்த உலூகங்கள், இந்த வாக்கியங்களையே மாற்றி யமைத்த விந்தையையும், ஆசார்யர் காஞ்சியில் ஸித்தியடைந்த வரலாற்றை மட்டும் மாற்றியமைக்காத விந்தையையும், 'பகவத்பாதர் காஞ்சியில் ஸித்தி பெற்றார்—'स काञ्च्यामथ सिद्धिमाप' என்ற சிவரஹஸ்ய பாடத்தை மட்டும் 'சிவலோகம் சேர்ந்தார்—'ततो लोकमवाप शैवम्' என்று மாற்றிய ஜாலத்தையும், இப்படி இவர்கள் மாற்றிய வேறு இடங்களையும், இப்படி மாற்றியவர்கள் யார், எதற்காக இவர்கள் பாட மாற்றம் செய்தார்கள் என்பதையும் விரிவாக இப்பொழுது ஆராய்வோம்.

1. ஆனந்தகிரீயத்தில் எட்டு இடங்களில் பாட மாற்றம் காண்கிறது என்பதையும், முதலில் அவதார வைபவத்தில் பொருத்தமில்லாத கற்பனை இருப்பதையும் முன்பே கூறினோம்.

2. ஆனந்தகிரீயம் மூன்றும் ப்ரகரணத்தில், பழைய கையெழுத்துப் புஸ்தக பாடத்தில், "காலடியில் அவதரித்த ஆசாரியர் தமது எட்டாவது பிராயத்தில், ஊருக்கு அருகிலுள்ள ஆற்றில் முதலை பிடித்துக்கொள்ள அதனின்றும் விடுபடத் துறவறமேற்று, காலடியிலிருந்து புறப்பட்டுச் சிதம்பரம் வந்து, அங்கே கோவிந்த பகவத் பாதர்களிடம் பரமஹம்ஸாச்ரம ஸ்வீகாரமும் உபதேசமும் பெற்றார்" என்ற வரலாறு இருக்கிறது:—

**अष्टमे वर्षे प्राप्ते निजग्रामसमीपवाहिन्यां नद्यां ग्राहग्रहवशात् संन्यस्य, कालट्याख्यात् निजग्रामात् निर्गत्य, श्रीमद्व्याघ्रपुर-मागत्य, तत्र गोविन्दयोगीन्द्रसदुपदेशात् परमहंसाश्रमं स्वीकृतवान् श्रीशंकराचार्यः।**

புதிய அச்சுப் புஸ்தகத்திலோ, ஆசாரியர் சிதம்பரத்தில் ஜனித்ததாகக் கற்பித்த கதையை அநுஸரித்து, முதலை பிடித்ததையும் காலடியிலிருந்து புறப் பட்டதையும் அறவே விட்டுவிட்டு, ஆசாரியர் எட்டாவது வயதில் கோவிந்த பகவத்பாதர்களின் உபதேசத்தால் பரமஹம்ஸாச்ரமம் ஸ்வீகரித்தார் என்று மட்டுமே திருத்தி வெளியிட்டிருக்கிறார்கள்; "**अष्टमे वर्षे प्राप्ते श्रीमद्गोविन्दयोगीन्द्रस्य सदुपदेशात् परमहंसाश्रमस्वीकारं कृतवन्तः श्रीमच्छंकरभगवत्पादाचार्यवर्याः**" என்று.

கோவிந்த பகவத்பாதர் எங்கே வசித்தார் என்று இவர்கள் கூறவில்லை. அவர் வசித்த இடத்தைப்பற்றி

ஒவ்வொரு க்ரந்தம் ஒவ்வொரு விதமாகக் கூறுகிறது. கோவிந்த பகவத்பாதர்கள் சிதம்பரத்தில் இருந்தார்கள் என்கிறது ஆனந்தகிரீயம்; காசியில் வசித்தார் என்கிறது கோவிந்தநாதீயம்; பதரிகாச்ரமத்தில் வாழ்ந்ததாகப் பதஞ்ஜலிசரிதமும் சித்விலாஸீயமும் சொல்கின்றன; நர்மதா தீரத்தில் வசித்ததாக மொழிகிறது மாதவீயம். ஆனால், அவர் சிதம்பரத்தில் இருந்தார் என்பதே ஆனந்தகிரீயத்தின் சுத்த பாடம் அறிவிக்கும் செய்தி.

3. ஆனந்தகிரீயம் 55-ஆம் ப்ரகரணத்தில், சிவரஹஸ்யம், மார்க்கண்டேய ஸம்ஹிதை முதலிய ப்ரமாண க்ரந்தங்கள் கூறும் வரலாற்றை அநுஸரித்து, பகவத்பாதர் கைலாசம் சென்றது, அங்கே பரமேச்வரன் அருளிய ஐந்து ஸ்படிக லிங்கங்களையும் ஸௌந்தர்ய லஹரியின் முற்பகுதியையும் பெற்றுக்கொண்டுவருவது, கேதார க்ஷேத்திரத்தில் முக்தி லிங்கத்தை ஸ்தாபித்துப் பூஜிக்கும்படி ஏற்பாடு செய்வது ஆகிய நிகழ்ச்சிகள் வருகின்றன :—

**तस्मादुद्ङ्मार्गमवलंब्य योगविद्याप्राप्तवियत्पथसंचारः कैलासमधिगम्य पार्वतीसमेतं परमेश्वरं प्रणनाम। स्वात्मतयाऽनुसन्धानशीलस्य च परमगुरोरग्रतः परमेश्वरः पञ्च स्फाटिकलिङ्गानि प्रकाशयामास। जगदनुग्रहाय अम्बिकास्तवसारेण सह तान्यादाय, पुनरवनीतलमासाद्य, केदारक्षेत्रे तत्रैकं मुक्तिलिङ्गाख्यं प्रतिष्ठाप्य, तत्क्षेत्रपूजकान् पूजार्थं नियोजयामास। ततः कुरुक्षेत्रमागात्**

என்பது பழைய கையெழுத்து ப்ரதியிலுள்ள சுத்த பாடம்.

கோழியை மறைத்துவைத்தால் சூரியோதயமே ஆகாது என்று எண்ணிய கிழவியைப் போல் இந்த

வரலாறுகளை மறைக்க எண்ணிய புதுப் புஸ்தக ஸம்பாதகர்கள், மேற்கண்ட வாக்கியங்கள் அனைத்தையும் ஒரேயடியாக விழுங்கி விட்டு, 'तस्मादुदङ्मार्गमवलंब्य अमरलिङ्गं केदारलिङ्गं दृष्ट्वा कुरुक्षेत्रमार्गात्' என்று கேதார லிங்கத்தை தரிசித்துச் சென்றதாக மட்டும் வெளியிட்டார்கள். இதிலிருந்தே இந்த மலை விழுங்கிகளின் போக்குத் தெளிவாகத் தெரிகிறதல்லவா ?

4. பகவத்பாதர் ஐந்து ஸ்படிக லிங்கங்களைப் பெற்று வந்து, கேதாரத்தில் முக்திலிங்கத்தை ஸ்தாபித்த வரலாற்றையே மறைத்தவர்களுக்கு, ஆசாரியர் நீலகண்டேசுவர க்ஷேத்திரத்தில் வரலிங்கத்தை ஸ்தாபித்துப் பூஜிக்கும்படி ஏற்பாடு செய்த வரலாற்றைத் தங்கள் புதிய புத்தகத்தில் வராமற் செய்வதுதானு பெரியகாரியம்? இங்கும் அவர்களுடைய சாம்பரி மாயை அபார வேலை செய்தது.

'तस्मात् द्वारकादिदिव्यस्थलविलोकनवशात् प्रादक्षिण्येन नीलकण्ठेश्वरं नत्वा तत्र शिष्यैः पूज्यमानः परमगुरुः वरनामकं लिङ्गं प्रतिष्ठाप्य तत्रस्थान् पूजार्थं नियुज्य ततः क्रमादयोध्यां प्राप' என்று இருந்த ஆசார்ய சரித வாக்கியத்தை, 'இவ்வளவு நீளமான வாக்கியமா பகவத்பாதருக்கு? அவர் எதற்காக நீலகண்டேச்வரரிடம் போக வேண்டும்? எதற்காக வரலிங்கத்தை ஸ்தாபிக்க வேண்டும்?' என்று அஸூயா பரவசர்களாகி, 'तस्मात् द्वारकादिदिव्यस्थलविलोकनात् प्रादक्षिण्येनायोध्यां प्राप' என்று வாக்கியத்தைக் குட்டையாக்கி, ஆசாரியரை நேரே அயோத்திக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். பகவத்பாதர் அங்கங்கே தம் பொற்பாதங்களை வைத்து லோகோபகாரகமாகச் செய்த நற்செயல்களை இந்த ஸம்பாதகர்கள் வெளியிடவே இல்லை !

5. இப்பொழுது நாம் முக்கியமான கட்டத்துக்கு வருகிறோம். பகவத்பாதர் ச்ருங்ககிரியில் தாம் ஸ்தாபித்த சாரதா பீடம் என்ற வித்யா பீடத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் வசித்து, பல சிஷ்யர்களுக்கு ப்ரஹ்ம வித்யோபதேசம் செய்து, பிறகு பத்மபாதர் என்ற தம் சிஷ்யரை அங்கே பீடாதிபதியாக்கி, போகம் என்னும் ஸ்படிக லிங்கத்தை அந்தப் பீடத்தில் வைத்துவிட்டுப் புறப்பட்டார் என்ற வரலாறு, 63-ஆம் ப்ரகரணத்தில் இருக்கிறது. சுத்த பாடம் இது :—

**तत्रैव परमगुरुः द्वादशाब्दकालं विद्यापीठे स्थित्वा, बहुशिष्येभ्यः शुद्धाद्वैतविद्यायाः सम्यगुपदेशं कृत्वा, तदनन्तरं पद्मपादाख्यं कंचित् शिष्यं पीठाध्यक्षं कृत्वा, भोगनामकं लिङ्गं तस्मिन् पीठे निक्षिप्य स्वयं निश्चक्राम।**

புதிய புஸ்தக ஸம்பாதகர்கள், ஆசாரியர் ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கைலாசத்திலிருந்து கொண்டுவந்த உண்மையை ஏற்கனவே மறைத்துவிட்டபடியால், அதற்கு இணங்க, அவர் போக லிங்கத்தைச் சாரதா பீடத்தில் ஸ்தாபித்த வரலாற்றையும் மறைத்தார்கள். இப்படி மறைத்ததோடு நில்லாமல், பத்மபாதரை ஸுரேச்வராசார்யராக ஆள் மாறாட்டமும் செய்து, 'ஆசாரியர் சாரதா பீடத்தில் ஸுரேச்வராசார்யரை நியமித்தார்' என்று அச்சிட்டார்கள். இவர்களுடைய புதிய பாடம் இது :—

**तत्र परमगुरुः द्वादशाब्दं विद्यापीठे स्थित्वा, बहुशिष्येभ्यः शुद्धाद्वैतविद्यायाः सम्यगुपदेशं कृत्वा, तदनन्तरं कंचित् शिष्यं सुरेश्वराख्यं पीठाध्यक्षं कृत्वा स्वयं निश्चक्राम।**

இவ்விடத்தில், ஸுரேச்வரரின் பத்தினியான ஸரஸவாணி என்ற உபயபாரதியை ஆசார்யர் ஜயித்து,

ப்ரஹ்மலோகம் போகாதபடி வனதுர்கா மந்திரத்தினுல் பந்தனம் செய்து, ச்ருங்ககிரியில் அவளை ப்ரதிஷ்டை செய்ததாக வரலாறு இருப்பதனுல், தமது பத்தினியான உபய பாரதியை பூஜித்துக் கொண்டிருக்கும்படி ப்ரஹ்மாவதாரமான—ஸுரேச்வரரையே இந்தப் பீடத்தில் நியமிப்பது ஔசித்யக்குறைவாக இருப்பதை, 'பத்மபாதர்' என்ற பதத்தை 'ஸுரேச்வரர்' என்று மாற்றிய ஸம்பாதகர்கள் கவனிக்கவே இல்லை! ஆனுல் இந்த ஔசித்யக் குறைவை உணர்ந்த மாதவீயம்,

'कतिचन विनिवेश्याथर्ष्यश्रृङ्गाश्रमादौ' (16-93)

என்ற ச்லோகத்தில், ச்ருங்ககிரியில் ஸுரேச்வரரை ஸ்தாபித்ததாகத் தெளிவாகக் கூருமல், 'ச்ருங்ககிரி முதலிய இடத்தில் சிற்சிலரை ஸ்தாபித்துவிட்டு' என்று பொதுவாகக் கூறுகிறது. பிறகு இதற்கு வியாக்கியானம் செய்தவர், முன் சொன்ன ஔசித்யக் குறைவைக் காணுமலே, 'சிற்சிலர்' என்பது ஸுரேச்வரர்முதலியோரைக் குறிப்பதாக எழுதிவிட்டார். இந்த ஔசித்யக் குறைவைக் கருதியே, ஸுரேச்வரர் சாரதா பீடத்தில் இருந்ததாகச் சொல்லாமல், 'த்வாரகா பீடத்தில் ஸுரேச்வரர் இருந்தார்' என்று த்வாரகா பீடத்து க்ரந்தங்கள் கூறுகின்றன. ஆனந்தகிரீயத்தில் ச்ருங்ககிரி, காஞ்சி என்னும் இரண்டு பீடங்களே இடம் பெறுகின்றன; த்வாரகை முதலிய பீடங்களை இது சொல்லவில்லை. சித்விலாஸீயமோ, ஆனந்தகிரீயத்தில் உள்ள கதா பாகத்தை அநுவதித்துவிட்டு, ஸுரேச்வரரைச் சாரதா பீடத்தில் ஸ்தாபித்ததாக மாற்றிக் கூறியது. அதன் கண்ணிலும் ஔசித்யக் குறைவு படவில்லை. ஆனுல்

ச்ருங்ககிரி மடத்து வரலாற்றைக் கூறும் குருவம்ச காவ்யம் இங்கு விழித்துக்கொண்டது!

'सुरेश्वराचार्य सरस्वतीं त्वं संपूजयन्नास्व चिरादिहेति ।
दत्वाभ्यनुज्ञां विनताय तस्मै शिष्यैः समस्तैः स जगाम काञ्चीम् ॥ '(3-34.)

என்ற ச்லோகத்தில், 'ஸரஸ்வதியைப் பூஜித்துக்கொண்டு வெகுகாலம் இங்கு ச்ருங்கேரியில் இரு' என்று ஸுரேச்வராசார்யருக்கு ஆசார்யபாதர் ஆஜ்ஞை செய்ததாகக் கூறும் குருவம்ச காவ்யம், ஸுரேச்வராசார்யரின் பூர்வாச்ரம பத்தினியான உபயபாரதியை அம்பிகை ரூபத்திலேயே ச்ருங்ககிரிக்கு அழைத்துப்போய்ச் சாரதா பீடத்தில் ப்ரதிஷ்டை செய்து பார்த்தாவே பத்னியைப் பூஜிக்கும்படி சொல்வதில் ஔசித்யக் குறைவு இருப்பதை அறிந்தது.

அதனால்தான் குருவம்ச காவ்யம், 'ஆசார்யர் மண்டனமிச்ரரை ஜயித்த பிறகு, சாபம் விலகின உபய பாரதி அந்தர்த்தானமடைந்துவிட்டாள்' என்று வரலாற்றை மாற்றுகிறது :—

एवं दिनेष्वतिगतेष्वथ सप्तमेऽह्नि
भिक्षां विधत्तमिति तौ सममाह्वयत् सा ।
अन्तर्दधे यतिवरात्मकशंकरस्य
संदर्शनेन परिमुक्तमुनीन्द्रशापा ॥ (2-54.)

பிறகு, காச்மீரத்தில் ஆசார்யர் ஸர்வஜ்ஞ பீடம் ஏறும் சமயத்தில் ஸரஸ்வதிக்கும் ஆசார்யருக்கும் பல சாஸ்த்ரங்களில் வாதம் ஏற்பட, அதற்கெல்லாம் ஆசார்யர் பதில் கூற, பின்பு காம சாஸ்திர விஷயத்தில் ஸரஸ்வதி

பல பிரச்னங்களைக் கேட்க, ஆசார்யர் பரகாய ப்ரவேசம் முதலியவை செய்து விஷயமறிந்து அவற்றுக்கு விடையளிக்க, அதனால் சந்தோஷமடைந்த ஸரஸ்வதி, 'வரத்தைக் கேள்' என்று சொல்ல, அதற்கு ஆசார்யர் தம்முடன் ச்ருங்ககிரிக்கு வரும்படி ஸரஸ்வதியை அழைக்க, அவள் அதற்குச் சம்மதித்ததாகவும், அப்படியே அவளை அழைத்து வந்து ஆசார்யர் ச்ருங்ககிரியில் ஸரஸ்வதி ப்ரதிஷ்டை செய்து ஸுரேச்வரரைப் பூஜிக்கும்படி ஏற்படுத்தினதாகவும் குருவம்ச காவ்யம் சொல்கிறது.

மாதவீயத்தில், 'ஆசார்யர் மண்டனமிச்ரரை ஜயித்த பிறகு அவருடைய அர்த்த பாகமாகிய உபயபாரதியையும் வாதத்தில் வென்றார். அவள் காமசாஸ்த்ர ஸம்பந்தமான கேள்விகளைக் கேட்க, பரகாய ப்ரவேசம் செய்து விஷயங்களை அறிந்து அவளுக்குப் பதில் சொன்னார்' என்ற வரலாறு வருகிறது. ஆனால், 'ஆசார்யர் உபயபாரதியையே ச்ருங்ககிரிக்கு அழைத்துப்போய் ப்ரதிஷ்டை செய்தார்' என்று கூறாமல், 'நாம் ஸ்தாபித்த ச்ருங்ககிரி முதலிய இடங்களில் நீ ஸாந்நித்யம் செய்து உன்னை வழிபடும் பக்தர்களுக்கு இஷ்டமான வரங்களைக் கொடுக்கவேண்டும் என்று ஆசார்யர் பிரார்த்திக்க, அப்படியே செய்கிறேன் என்று சொல்லிவிட்டு உபயபாரதி ப்ரஹ்ம லோகம் போய்ச் சேர்ந்தாள்' என்று மாதவீயம் மொழிகிறது:—

तस्मादस्मत्कल्पितेष्वर्च्यमाना
स्थानेषु त्वं शारदाख्या दिशन्ती।
इष्टानर्थानृष्यशृङ्गादिकेषु
क्षेत्रेष्वास्व प्राप्तसत्संनिधाना ॥ (10-71.)

तथेति संश्रुत्य सरस्वती सा
प्रायात् प्रियं धाम पितामहस्य ।
अदर्शनं तत्र समीक्ष्य सर्वे
आकस्मिकं विस्मयमीयुरुच्चैः ॥ (10-72.)

மாதவீயமும் குருவம்ச காவ்யமும் இப்படி வரலாற்றை மாற்றி ஒருவிதமாக ஔசித்யக் குறைவைப் பரிஹரித்தன என்றாலும், மாதவீயத்துக்கும் குருவம்ச காவியத்துக்கும் மூலமாக உள்ள ஆனந்தகிரீயத்தில், ஆசார்யர் உபய பாரதியையே அழைத்துவந்து ச்ருங்ககிரியில் ப்ரதிஷ்டை செய்தார் என்ற வரலாறுதான் காண்கிறது. அங்கே ஸுரேச்வரரையே வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்வது அநுசிதமாதலால், ச்ருங்ககிரியில் பத்மபாதரை நியமனம் செய்ததாகக் கூறும் ஆனந்தகிரீயப் பழைய பாடமே சரியான பாடம் என்பதையும், ஸுரேச்வரரை நியமனம் செய்ததாக மாற்றிக் கூறும் புதிய பாடம் எங்கும் காணாத புதுமை என்பதையும் நாம் உள்ளங்கை நெல்லிக் கனியாகக் காண்கிறோம்.

6. காஞ்சியில் காமாக்ஷி ஸந்நிதியில் பகவத்பாதர் ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டை செய்தது, அவ்விடத்தில் தாம் வஸிக்க யோக்யமான ஸ்ரீமடம் நிர்மாணம் செய்தது, அங்கே தம் சிஷ்யரான ஸுரேச்வராசார்யரை நியமித்தது, அவரிடம் யோகலிங்கத்தைப் பூஜிக்கும்படி கொடுத்தது, அவரைக் காமகோடி பீடத்தில் வஸிக்கும்படி ஆஜ்ஞாபித்தது, அங்கேயே சிஷ்ய ஜனங்கள் பூஜிக்க ஆசாரிய பாதர் சுகமாக வஸித்தது ஆகிய வரலாறுகள், ஆனந்த கிரீயம் 65-ஆம் ப்ரகரணத்தில் வருகின்றன. அங்குள்ள சரியான பாடம் இது:—

अतः सर्वेषां मोक्षफलप्राप्तये दर्शनादेव श्रीचक्रं प्रभवतीति भगवद्भिराचार्यैस्तत्र निर्मितम्। तस्मान्मुक्तिकांक्षिभिः सर्वैः श्रीचक्रपूजा कर्तव्येति निश्चित्य, तत्रैव निजावासयोग्यं मठमपि परिकल्प्य, तत्र निजसिद्धान्तपद्धतिं प्रकाशयितुं अन्तेवासिनं सुरेश्वरमाहूय योगनामकं लिङ्गं पूजयेति तस्मै दत्त्वा त्वमत्र कामकोटिपीठमधिवसेति व्यवस्थाप्य, शिष्यजनैः परिपूज्यमानः परमगुरुः सुखमुवास।

இங்கு, ஆனந்தகிரீயத்தில் எங்குமே ஐந்து ஸ்படிக லிங்க வரலாறு இல்லை என்று சாதுரியமாக நிலைநாட்ட விரும்பிய சிலர், யோகலிங்க ஸமாசாரத்தையும், காஞ்சியில் பகவத்பாதருக்கு ஒரு மடம் இருக்கிறது என்பதையும், அங்கே காமகோடி பீடம் உள்ளது என்பதையும், ஸுரேச்வராசார்யரை அங்கு நியமித்து ஆசார்யபாதர் சுகமாக வஸித்தார் என்பதையும் ஒப்புக்கொள்ள விரும்பாமையால், அந்த வரலாறுகளைப் பரக்கக் கூறும் பழைய பாடத்தையே மாற்றி, மிகவும் சுருக்கமாக இரண்டு வாக்கியங்களை அச்சிட்டார்கள் :—

तस्मान्मुक्तिकांक्षिभिः सर्वैः श्रीचक्रपूजा कर्तव्येति दिक्। तस्मात् सर्वेषां मोक्षफलप्राप्तये ज्ञानादेव श्रीचक्रं प्रभवतीति भगवद्भिराचार्यैर्निर्मितमिति।

7. ஆசார்யபாதர் ஸேது ஹிமாசல மத்தியிலுள்ள எல்லா வர்ணத்தார்களையும் அத்வைத வித்யா நிஷ்டர்களாகச் செய்துவிட்டு, உலகில் அனைவராலும் வழிபடத் தக்க தமது சிஷ்ய பரம்பரையைக் கல்பம் முடியும்வரை காஞ்சீ பீடம் முதலிய பல ஸ்தானங்களில் இருக்கச் செய்து, அவர்கள் வாயிலாகவே உலகிலுள்ள எல்லாச் சிஷ்யர்களுக்கும் மோக்ஷமார்க்க உபதேசத்துக்கு ஏற்பாடு

செய்தார் என்பது, 67-ஆம் ப்ரகரணத்தில் காணும் உண்மை.

"परमगुरुः स्वतन्त्रपुरुषः शुद्धाद्वैतविद्यानिष्ठान् गरिष्ठान् सेतुहिमाचलमध्यदेशस्थानशेषान् ब्राह्मणादीन् कृत्वा तदीयसेवाङ्गीकारसमर्थां निजशिष्यपरंपरां आकल्पं काञ्चीपीठादितत्तत्पदस्थायिनीं कृत्वा, तन्मुखादेव सकलशिष्येभ्यो मोक्षमार्गोपदेशं च कल्पयित्वा" என்பது சுத்த பாடம்.

ச்ருங்ககிரி பீடத்தைத் தவிர மற்றப் பீடங்களை ஆசார்யர் ஸ்தாபித்த உண்மையை ஒப்புக்கொள்ள விரும்பாத சிலர், இங்கே 'காஞ்சீ பீடம் முதலிய— 'काञ्चीपीठादि' என்றுள்ள பழைய பாடத்தை, 'ச்ருங்ககிரி' என்று தமது அச்சு ப்ரதியில் மாற்றி உலகில் பரப்பி விட்டார்கள். அவர்கள் புகுத்திய புதுமையைப் பாருங்கள் :—

परमगुरुः स्वतन्त्रपुरुषः शुद्धाद्वैतविद्यानिष्ठान् गरिष्ठान् सेतुहिमाचलमध्यदेशस्थानशेषान् ब्राह्मणादीन् कृत्वा, तदीयसेवाङ्गीकारसमर्थां निजशिष्यपरंपरां आकल्पं—இதுவரை சுத்த பாடத்தை வைத்துக்கொண்டு शृङ्गगिरिस्थानस्थां कृत्वा सकलशिष्येभ्यो मोक्षमार्गोपदेशं कृत्वा என்று மாயாவித்தனம் செய்தார்கள்.

8. ஆனந்தகிரீயம் 74-ஆம் ப்ரகரணத்தின் ஆரம்பத்தில்—ஸர்வ லோககுருவான ஆசார்யபாதர் பரமதகாலானலர் முதலிய ஆறு சிஷ்யர்களை அங்கங்கே அனுப்பி வைதிக ஷண்மதங்களை ஸ்தாபிக்கச் செய்து, பிறகு தமது அருகில் நின்ற இந்த்ர ஸம்ப்ரதாயஸ்தரான ஸுரேச்வரரைக் கூப்பிட்டு, 'மோக்ஷ லிங்கத்தைச் சிதம்பரத்துக்குப் பூஜிக்கும்படி அனுப்பிவிடு' என்று

ஆஜ்ஞை செய்துவிட்டு, தாம் தமது லோகம் போக விரும்பி, முக்தி ஸ்தலமாகிய காஞ்சியில் ஒருசமயம் ஏகாந்தமாக அமர்ந்து, ஸ்தூல சரீரத்தை ஸூக்ஷ்ம சரீரத்திலும் ஸூக்ஷ்ம சரீரத்தைக் காரண சரீரத்திலும் லயப்படுத்தி, அதையும் விலக்கி, ஸச்சிதானந்தரூபமான அகண்ட ப்ரஹ்ம ஸ்வ ரூபத்தை அடைந்து, ஸர்வ ஜகத் வ்யாபகமான சைதன்ய ரூபத்தில் இப்பொழுதும் இருக்கிறார் என்ற வரலாறு விளங்குகிறது. பழைய சுத்த பாடம் இது:—

**ततः परं सर्वलोकगुरुराचार्यः स्वशिष्यान् परमतकालानलादियतीन् तदन्यांश्च तत्र तत्र विषयेषु प्रेरयित्वा, तदनन्तरं समीपस्थं इन्द्रसंप्रदायवर्तिनं सुरेश्वरमाहूय, 'भो शिष्य, इदं मोक्षलिङ्गं चिदंबरस्थले प्रेषय' इत्युक्त्वा, स्वयं स्वलोकं गन्तुमिच्छुः काञ्चीनगरे मुक्तिस्थले कदाचिदुपविश्य स्थूलशरीरं सूक्ष्मे अन्तर्धाय सद्रूपो भूत्वा सूक्ष्मं कारणे विलीनं कृत्वा चिन्मात्रो भूत्वा अङ्गुष्ठपुरुषः तदुपरि परिपूर्णमखण्डमण्डलाकारमनन्तं प्राप्य सर्वजगद्व्यापकचैतन्यमभवत्। सर्वव्यापकचैतन्यरूपेणाद्यापि तिष्ठति।**

காஞ்சீ மடத்தில் சங்கரரின் அருகில் ஸுரேச்வரர் இருந்தார் என்றும், அவர் இந்த்ரஸரஸ்வதீ ஸம்ப்ர தாயஸ்தர் என்றும், மோக்ஷ லிங்கத்தைச் சிதம்பரத்தில் கொண்டு சேர்க்கும்படி ஆசார்யர் அவருக்குக் கட்டளை யிட்டார் என்றும் கூறுகிற ஆனந்தகிரீய வாக்கியங்களை எடுத்துவிட்டு, எஞ்சிய பகுதியை மட்டும் புதிய ஸம்பாத கர்கள் ஏற்றுக்கொண்டார்கள். அவர்களுடைய புதுப் பாடம் இது:—

**ततः परं सर्वज्ञः सकलगुरुराचार्यः स्वशिष्यान् परमतकालानलादीन् यतीन् तदन्यांश्च तत्र तत्र विषयेषु प्रेषयित्वा**

स्वयं स्वेच्छया स्वलोकं गन्तुमिच्छुः काञ्चीनगरे मुक्तिस्थले कदाचिदुपविश्य स्थूलशरीरं सूक्ष्मे अन्तर्धाय सद्रूपो भूत्वा सूक्ष्मं कारणे विलीनं कृत्वा चिन्मात्रो भूत्वा अङ्गुष्ठपुरुषः तदुपरि पूर्णमखण्डमण्डलाकारमानन्दमीश्वरसंनिधौ प्राप्य सर्वजगद्व्यापकं चैतन्यमभवत्। सर्वव्यापकचैतन्यरूपेणाद्यापि तिष्ठति।

காஞ்சியில் ஆசாரியர் ஸித்தியடைந்த விவரம் மட்டும் புதிய புஸ்தகத்தில் என்ன காரணத்தாலோ எடுக்கப்பட வில்லை. 'ஆசார்யர் காஞ்சியை விட்டுப் புறப்பட்டு காச்மீரம், பதரீ, கேதாரம் முதலிய இடங்களுக்குச் சென்று அங்கிருந்தபடியே கைலாஸம் போய்விட்டார்கள்' என்று ஒரு வாக்கியத்தை அமைத்து மாதவீயத்துக்கு அநுகுண மாக, இவர்கள் இந்தப் புதிய ஆராய்ச்சியை முடித் திருக்கலாமே! அப்படி ஏன் செய்யவில்லையோ, பகவானுக்குத்தான் தெரியும்.

காஞ்சியில் ஆசார்யர் ஸித்தியடைந்த பிறகு சிஷ்யர்கள் செய்யவேண்டிய ஸம்ஸ்காரங்களையெல்லாம் காஞ்சியிலிருந்த ப்ராஹ்மணர்கள் அனைவரும் சேர்ந்து செய்தார்கள் என்று, விசுவேசுவர ஸ்மிருதி முதலிய வற்றைப்பார்த்து, பழைய கையெழுத்து ப்ரதிகளில் காணாத புதிய வாக்கியங்களைக் கல்பித்துப் பூர்ணமான யதி ஸம்ஸ்கார விதியையே இந்த அற்புத ஸம்பாதகர்கள் அச்சிட்டார்கள். எட்டு இடங்களில் பாடங்களை மாற்றிய வர்கள், இந்த இடத்தில் புதிய பாடத்தை ச்ருஷ்டித் தார்கள் :—

तत्रत्याः ब्राह्मणास्सर्वे शिष्याः प्रशिष्याश्च उपनिषद्गीता-ब्रह्मसूत्राणि सम्यक् पठन्तः अत्यन्तशुचिस्थले गर्तं कृत्वा तत्र गन्धाक्षतबिल्वपत्रतुलसीप्रसूनादिभिः संपूज्य तच्छरीरं समाधिं

चक्रुः। ततः प्रत्यहं क्षीरतर्पणक्षीरान्ननिवेदनादिभिः सर्वोपचारैः विधिवदभ्यर्च्य ततो महापूजादिने बहुयतीनां ब्रह्मविदां ब्राह्मणानां कर्मज्ञाननिष्ठानां उत्तमानां च श्रीमदद्वैतविद्याप्रकाशकश्रीमत्परमहंसपरिव्राजकाचार्यश्रीमच्छङ्करगुरुस्वामिनमुद्दिश्य परब्रह्मणो धिया स्वाद्वन्नमूलशाकसूपभक्ष्यघृतदध्यादिसमस्तव्यञ्जनयुक्तमन्नं वस्त्राभरणैस्साकं ईश्वरपूजामेवं चक्रुः। पूजां सर्वत्रैवं चक्रुः।

இவ்விதமாகப் புதிய புஸ்தகத்தில், ஆதியில் ஆசாரியர் காலடியில் அவதரித்த வரலாற்றை அவர் சிதம்பரத்தில் ஜனித்ததாக மாற்றியும், நடுவில் ஆசாரியர் ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கைலாஸத்திலிருந்து கொண்டு வந்தது, அவற்றைப் பல இடங்களில் ஸ்தாபித்தது, பத்மபாதரை ச்ருங்ககிரியில் ஸ்தாபித்தது, காஞ்சியில் மட நிர்மாணம் செய்து அங்கே காமகோடி பீடத்தில் ஸுரேச்வரரை ஸ்தாபித்தது என்ற கதா பாகங்களை எடுத்துவிட்டும், ச்ருங்ககிரியில் ஸுரேச்வரரை ஸ்தாபித்ததாகக் கல்பித்தும், ச்ருங்ககிரி பீடத்தை மாத்திரம் ஆசார்யர் ஸ்தாபித்ததாகக் காட்டியும் கி. பி. 1881-ஆம் ஆண்டில், அதாவது இன்றைக்கு எண்பது வருஷங்களுக்கு முன்பு, சிலர் கல்கத்தாவில் ஆனந்தகிரீய சங்கர விஜயத்தை நவீன வடிவில் வெளியிட்டார்கள். நமக்கு ஆதாரமாக இருக்கும் காசி தாரக மடத்துக் கையெழுத்து ப்ரதியோ, 145 ஆண்டுகள் பழமையானது. சென்னை மான்ஸ்கிருப்ட் லைப்ரரி ப்ரதியும் உண்மையான சுத்த பாடங்களையுடையது. இப்படி ஆக்ஷேபிக்க முடியாத ப்ரமாண பலத்தைக்கொண்டே நாம் ஆராய்ச்சியை வெளியிடுகிறோம் என்பதைத் தடஸ்தர்கள் நன்றாக அறிவார்கள்.

இவ்விதம் ஆனந்தகிரி சங்கரவிஜய புஸ்தக பாடத்தை மாற்றி அச்சிட்டவர்கள் யாராக இருக்கலாம் என்று வாசகர்கள் கேட்டறிய விரும்புவது இயல்பாகை யால், அது விஷயமான உண்மைகளை இனி விவரமாகக் கூறுவோம்.

சாத்தனூர் கல்யாணராம சாஸ்திரிகள் என்பவர், காஞ்சியில் பகவத்பாதர் ஸித்தியடைந்ததாகக் கூறும் சிவரஹஸ்யம் 9-ஆம் அம்சம், 16-ஆவது அத்தியாயமாகிய சங்கரப்ராதுர்பாவாத்யாயத்தில், க்ரந்தத்திலேயே இல்லாத பதிமூன்று ச்லோகங்களை அதிகப்படியாக ச்ருஷ்டித்துச் சேர்த்து, அந்த அத்தியாயத்தை மாத்திரம் கி.பி. 1873-ஆம் ஆண்டில் சென்னையில் தெலுங்கு லிபியில் வெளியிட்ட செய்தியை காமகோடி ப்ரதீபம், 1-ஆம் மலர் மூன்றாவது இதழில் 'சிவரஹஸ்யம்' என்ற வ்யாசத்தில் கூறியிருக்கிறோம். காஞ்சி காமகோடி பீடத்தை மறைக்கவும், தமக்கு இஷ்டமான பீடத்தை மாத்திரம் ஸ்தாபிக்கவும் அவர் படாத பாடு பட்டிருப்பதை நன்கு விளக்கியிருக்கிறோம்.

சாஸ்திரிகள் தமது வெளியீட்டில், '**स काञ्च्यामथ सिद्धिमाप**' என்ற சிவரஹஸ்ய பாடத்தை ஒப்புக்கொண்டே, அதன் பிறகு '**काञ्च्यां तपस्सिद्धिमवाप्य दण्डी**' என்பது முதல் பதிமூன்று ச்லோகங்களைக் கல்பித்து, ஸித்தி என்ற சொல்லுக்குள்ள விதேஹ முக்தி என்ற பொருளைப் புரிந்துகொள்ளாமல், தபஸ்ஸின் ஸித்தி என்ற அர்த்தம் வரும்படியாகச் சாதுர்யமாக மாற்றி, 'காஞ்சியில் ஆசாரியர் ஸித்தியடையவில்லை; தபஸ்ஸின் ஸித்தியைத்தான் பெற்றார். பிறகு கேதாரத்தில்தான் உள்ளபடி ஸித்தி

அடைந்தார். இதுவே சிவரஹஸ்யம் கூறுவது. மாதவீயத்துக்கும் இது ஒத்து வருகிறது' என்று ஜகத்தில் பிரசாரம் செய்துவிட்டார்.

ஆனால் அப்புறம் நடந்தது வேறு! ஸித்தி பதத்துக்கு இங்கே விதேஹமுக்தி என்றுதான் அர்த்தம். ச்ருங்ககிரி மடத்து குரு வம்ச காவ்யத்திலும் இதே அர்த்தத்தில் ஸித்தி பதம் கூறப்பட்டிருக்கிறது என்பதையும், புதியனவாகச் சேர்த்த பதின்மூன்று ச்லோகங்கள் வடக்கிலும் தெற்கிலுமுள்ள சிவரஹஸ்ய நூல்களில் எதிலும் இல்லாமையால் ஜனங்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்ற உண்மையையும் உணர்ந்தறிந்த கல்யாணராம சாஸ்திரிகளின் வகையராவைச் சேர்ந்தவர்கள், முன்பு தாம் பதிப்பித்த பதின்மூன்று ச்லோகங்களை அறவே நீக்கிவிட்டு, 'स काञ्च्यामथ सिद्धिमाप' என்ற பாடத்தை மட்டும் 'ततो लोकमवाप शैवम्' என்று மாற்றி, கி. பி. 1875-ஆம் ஆண்டில் சென்னையில் ஸ்ரீ வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்திரிகளின் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு, 'ஆசார்யர் காஞ்சியில் ஸித்தியடைந்ததாகச் சிவரஹஸ்யம் சொல்லவில்லை' என்று வெளியிட்டார்கள்.

இப்படி 1873-இலும், 1875-இலும் சிவரஹஸ்யத்தின் 16-ஆம் அத்தியாயத்தைத் தமது விருப்பம்போல இரு வகையாக மாற்றிப் பிரசுரித்து, காஞ்சி காமகோடி பீடத்தை மறைக்க முயன்றவர்களே, மீண்டும் ஆறு ஆண்டுகள் கழித்து 1881-இல், ஆசார்யர் காஞ்சியில் காமகோடி பீடத்தை ஸ்தாபித்த வரலாற்றையும் காஞ்சியில் ஸித்தியடைந்த விவரத்தையும் கூறுகிற ஆனந்தகிரி சங்கரவிஜயத்

தில் தமது கைவரிசையைக் காண்பித்தார்கள். புதிய ச்லோகங்களை இணைத்தும் பாடமாற்றம் செய்தும் சிவரஹஸ்யத்தை வெளியிட்டது போலவே, 'ஆனந்தகிரீயத்தில் காஞ்சி காமகோடி பீடத்தைப்பற்றிய வரலாறு இல்லை' என்று உலகுக்குத் தெரிவிக்க வேண்டுமென்ற தீவிரமான ஆவலுடன், புதிய பாடங்களுடன் தயாரித்த ஆனந்தகிரி சங்கரவிஜய புஸ்தகத்தைக் கல்கத்தாவில் ஓர் அச்சகத்துக்கு அனுப்பி வெளியிட்டார்கள். சென்னையில் அச்சிட்டால் பாடமாற்றத்தைப் பண்டிதர்கள் கண்டுவிடுவார்களே என்று அஞ்சினார்கள் போலும்! 'உண்மையான பாடமுள்ள ஆனந்தகிரீயத்தின் கையெழுத்து ப்ரதிகள் சிற்சில லைப்ரரிகளில்தானே இருக்கின்றன; அவற்றை யார் பார்க்கப்போகிறார்கள்? ஆயிரக்கணக்காக அச்சிட்ட புஸ்தகங்களை உலகில் பரப்பிவிட்டால் பழைய சுவடிகளைக் கண்ணில் விளக்கெண்ணெயை விட்டுக்கொண்டு தேடும் பாண்டித்யமும் பொறுமையும் யாருக்கு இருக்கப்போகின்றன?' என்ற கருத்துடன் இவர்கள் வேலை செய்திருக்கிறார்கள் என்பது, பாதிதமாகப் போக இயலாத நல்ல அநுமானம். இவர்கள் இவ்வளவு செய்தும், இன்றைக்கும் காசி முதல் கன்யாகுமரி வரையிலுள்ள பல லைப்ரரிகளில் கிடைக்கும் ஆனந்தகிரீய சங்கரவிஜய புஸ்தகத்தில், காஞ்சீ காமகோடிபீட ஸ்தாபன வரலாறுகள் தெளிவாக இருக்கின்றன என்ற உண்மையை வாசகர்கள் ஏற்கனவே அறிந்திருக்கிறார்கள்.

'இவ்வளவு பாடுபட்டுக் காமகோடி பீடத்தை மறைத்து ஆனந்தகிரீயத்தை வெளியிட்டவர்கள், அதில் ஆசார்யர் காஞ்சியில் ஸித்தியடைந்த விவரத்தைக் கூறும் பகுதியை மாற்றவில்லையே; ஏன்? அது அவர்களுக்கே பாதகமில்லையா?'

என்று வாசகர்கள் ஐயுறலாம். ஆம், இது அவர்கள் காமகோடி பீடத்தை மறைக்க முயன்றதற்கு விபரீதமாகக் காமகோடி பீடத்தை ஸ்தாபிக்கவே பயன்பட்டது.

'ஆனந்தகிரீயமே அப்ரமாணம் என்று உலகுக்குக் காட்டிவிடுவோம். அப்பொழுது, காமகோடி பீட ஸ்தாபனத்தைக் கூறும் பழைய ஆனந்தகிரீய ப்ரதி தட்டுக்கெட்டுச் சிலருக்குக் கிடைத்தாலும் பாதகமில்லை. ஆனந்தகிரீயத்தை அப்ரமாணமாகக் காட்டிவிட்டால், அதில் ஆசார்யருக்குக் காஞ்சியில் ஸித்தி கூறப் பெற்றிருந்தாலும் அதை ஒருவரும் நம்பமாட்டார்கள்' என்று எண்ணியே, புதிய ஸம்பாதகர்கள் காலடியில் ஆசார்யரின் அவதாரத்தைக் கூறும் பழைய பாடத்தை மாற்றிச் சிதம்பரத்தில் ஜனித்தார் என்றும், பிதா தவமியற்றக் காட்டுக்குச் சென்ற பிறகு தனியே இருந்த மாதாவுக்கு நடராஜனின் அநுக்ரஹத்தால் ஜனித்தார் என்றும் அஸம்பாவிதமாகவும் அற்புதமாகவும் ஆசார்ய ஜனன வரலாற்றை ஸ்வேச்சையாகக் கல்பித்து, க்ரந்தாரம்பத்தில் புகுத்தினர்கள். 'இந்த விருத்தாந்தம் எந்தச் சங்கரவிஜயத்திலும் இல்லையே; ஆனந்தகிரீயத்தை ஆதாரமாகக் கொண்ட மாதவீயத்திலும் குருவம்ச காவ்யத்திலுங் கூட இல்லையே!' என்பதை அவர்கள் நினைத்துப் பார்க்கவில்லை. ஆனல் அவர்கள் நினைத்துக் கனவு கண்டது ஒன்று உண்டு; அது என்ன?

ஆனந்தகிரீயத்தின் ஆரம்பத்தில் இத்தகைய ஒரு கற்பனை இருந்தால், இதைப் படிப்பவர்கள், 'எவனே ஆசார்ய விரோதி ஒருவன் எழுதிய கந்தைச் சுவடி இது' என்று எண்ணி இதை அப்ராமாணிகமென்று முடிவு கட்டுவார்கள்.

ஆகவே, ஆசார்யர் காஞ்சியில் ஸித்தியடைந்ததாக இதில் சொல்லப்பெற்றிருந்தாலும் இதை யாரும் நம்பப்போவ தில்லை. இப்படியாக இந்த க்ரந்தமே ஒழிந்து போகும்—என்பதுதான் அவர்கள் கண்ட பகற் கனவு!

சிருங்ககிரி மடத்து ஆஸ்தானப் புலவராக இருந்த பட்டஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் என்பவரும், சிதம்பரத்தில் ஆசார்யரின் ஜனனத்தைக் கூறும் கல்பித ஆனந்தகிரீய பாடத்தை வாஸ்தவமென்று நம்பினவராய், சென்னையில் கி. பி. 1884-ஆம் வருஷத்தில் தெலுங்கு லிபியில் தாம் வெளியிட்ட 'ஆசார்ய சரித்ர விமர்சனம்' என்ற புத்தகத்தின் இரண்டாம் பாகத்தில் மட சம்பந்தமான சர்ச்சைகளைச் செய்து, 'உலக ப்ரஸித்திக்கு விரோதமாகச் சிதம்பரத்தில் ஆசார்ய ஜனனத்தைக் கூறுவதால் ஆனந்தகிரீயம் அப்ரமாணம்' என்று பறைசாற்றினர். இது மட்டுமா? ஆனந்தகிரீயத்தைப் பல இடங்களில் தூற்றிவிட்டு, இதே ஆனந்தகிரீயத்தை மூலமாகக் கொண்டவையும் மனம் போனபடி பல இடங்களில் ஆசார்ய சரிதத்தை மாற்றிச் சொல்பவையுமான மாதவீயத்தையும் சித்விலாஸீயத்தையும் போற்றியிருக்கிறார்.

ஆனந்தகிரீயத்தை இவர் தூற்றுவதற்கு மற்றுமுள்ள காரணங்கள் மூன்று:—(1) பகவத்பாதர் ச்ருங்ககிரி பீடத்தில் ஸுரேச்வரரை ஸ்தாபித்ததாகச் சொல்லாமல், பத்மபாதரை ஸ்தாபித்ததாக ஆனந்தகிரீயம் அறைகிறது! (2) ஆசாரியர் காஞ்சியில் மட நிர்மாணம் செய்து, அதில் ஸுரேச்வரரை ஸ்தாபித்து யோகலிங்கத்தைப் பூஜிக்கும்படி சொன்னார் என்று ஆனந்தகிரீயம் உண்மை விளம்பியாக

விளங்குகிறது; இவர்களைப் போல யதா-அர்த்த-வாதியாக இல்லை! (3) ஆசார்யர் கேதாரத்திலிருந்து கைலாஸம் போனார் என கூறாமல் காஞ்சியிலேயே ஸித்தியடைந்ததாக ஆனந்தகிரீயம் சொல்கிறது. இப்படி உண்மைகளை யுரைக்கும் ஆனந்தகிரீயத்தை என்ன செய்தால் தீரும்! 'இந்த க்ரந்தமே அப்ரமாணம்' என்று சொல்லிவிட்டால், 'சட்டி சுட்டது; கை விட்டது' என்று ஹாய்யாக மூச்சுவிடலாமே! இப்படியெல்லாம் என்ன என்னவோ யுக்திகள் செய்தும், இந்தச் சட்டியின் சூடு இவர்கள் கையை விட்டு நீங்கவில்லை!

"ச்ருங்ககிரி மடத்தில் பத்மபாதரைப் பீடாதிபதியாக நியமித்ததாகவும், காஞ்சி மடத்தில் ஸுரேச்வரரைப் பீடாதிபதியாக நியமித்ததாகவும், போகலிங்கத்தை ச்ருங்ககிரியிலும் யோகலிங்கத்தைக் காஞ்சியிலும் ப்ரதிஷ்டை செய்ததாகவும் ஆனந்தகிரீயம் கூறுகிறது" என்ற உண்மையை, உண்மையான பாடத்தைப் பார்த்த பட்டஸ்ரீ சாஸ்திரிகளே தமது நூலில் ஐயந்திரிபறச் சொல்லியிருப்பதனால், கல்கத்தா அச்சுப், பதிப்பிலுள்ள மாற்றுப் பாடத்தை அக்காலத்திலேயே அவர் ஒப்புக்கொள்ளவில்லை என்று தீர்மானமாகத் தெரிகிறதே! எப்படிப் போனாலும் இவர்களுக்கு இப்படி ஆபத்தா வந்து சேரவேண்டும்!

ஒருவர் ஆனந்தகிரீய பாடத்தை மாற்றுகிறார். மற்றோர் அபிமானி இந்த மாற்றத்தைச் சம்மதிக்கவில்லை. உண்மையான ஆனந்தகிரீய பாடமோ இன்றும் பல லைப்ரரிகளில் அப்பழுக்கில்லாமல் காட்சியளிக்கிறது. "ஆனந்தகிரீயம் பரம ப்ரமாணம்" என்று இன்னுமொரு ச்ருங்ககிரி அபிமானியான குருவம்ச காவ்யகர்த்தா ஒப்புக்கொண்டிருக்

கிறார்—தமது காவ்யத்திலேயே. ஆகவே, ஆனந்தகிரீயத்துக்கு மாறாக இருக்கும் மாதவீயமோ, சித்விலாஸீயமோ, மற்ற நூலோ ப்ரமாணமாகாது என்பது தெளிவு. பட்டஸ்ரீ போன்றவர்கள் பரஸ்பரவிருத்தமாகக் கூறுகிறார்கள். உண்மையை அறிந்த உலகத்தின் காதில் அவர்களின் மாயச் சொல் ஏறாது என்பதும் தெளிவு. ஆனந்தகிரீய பாடங்களை மாற்றி வெளியிட்ட ஸம்பாதக சிகாமணிகளின் நோக்கம் ஒரு நாளும் நிறைவேறாது என்பதும் தெளிவு. தாங்களே அபத்தமாக வெளியிட்ட வங்கப் பதிப்பை வைத்துக் கொண்டு, பழைய கையெழுத்து ப்ரதிகளிலுள்ள உண்மைகளை மறுக்கும் ஆபாத ரமணீயமான சிலருடைய வாதங்கள் பண்டிதகோஷ்டியில் மதிப்பைப் பெறமாட்டா என்பதும் தெளிவு.

நடுக்காவேரி ராமஸ்வாமி சாஸ்திரிகளின் குமாரரான மேற்படி பட்டஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் தாம் எழுதிய 'ஆசார்ய சரித்ர விமர்சன' நூலில் முதல் பாகமாக, தாம் உபஜீவித்து வந்த மடத்தின் ப்ராதான்யத்தைக் குறிப்பிடுகிறார். மாதவீயமும் சித்விலாஸீயமும் கூறும் பொய்யான கதாபாகத்தை அநுஸரித்து அவர் எழுதியதும், 1884-ஆம் வர்ஷத்தில் அச்சானதுமான ஆசார்ய சரித்திரத்தையே இப்பொழுதும் சிலர் அச்சுப்போட்டுப் பிரசுரிக்கிறார்கள். அது எவ்வளவு தூரம் உண்மை வரலாறுகளைப் போதிப்பது என்பதை, பட்டஸ்ரீயின் விஷயம் தெரிந்தவர்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை.

இதுகாறும் கூறியதிலிருந்து, மிகப் புராதனமான ஆனந்தகிரீய சங்கரவிஜயம் ஆசார்யபாதர் ஸ்ரீ காஞ்சி

காமகோடி பீடத்தை ஸ்தாபித்த உண்மையையும், அந்தப் பீடத்தில் ஸுரேச்வராசார்யர் யோகலிங்கத்தைப் பெற்ற உண்மையையும் அறிவிப்பதைத் தெளிவாகக் கண்டோம். உலகத்தினர் ஸ்ரீகாஞ்சி பீடத்தின் பெருமையை நன்கு உணர்ந்து, அந்தப் பீடத்தை இப்பொழுது அலங்கரிக்கிற வரும், தபோமஹிமையும் ஆத்மாநுபவமும் பரமசாந்தியும், பக்ஷபாதமின்றி மக்களுக்கு அருள்புரியும் மனப்பான்மை யும், அபரிமித ஆத்ம குணங்களும் அமைந்தவருமான ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ என்னும் திவ்ய நாமதேய முடைய குருசரணர்களிடம் அவ்யாஜ பக்தி பண்ணி, உள்ளபடி உய்யவேண்டும் என்று ப்ரார்த்தித்துக்கொண்டு, இந்த ப்ரார்த்தனையுடன் இந்தக் கட்டுரைமாலையைப் பூர்த்தி செய்கிறேன்.

## முக்கிய அறிவிப்பு

முக்கியமான ஒரு விஷயத்தை இப்பொழுது வாசகர் களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். பகவத்பாதரின் சரித்திரத்தைக் கூறும் பழைய க்ரந்தங்களின் சுத்த பாடத்தை நாம் கவனிக்கும்பொழுது, அவற்றில் ஸ்ரீகாஞ்சீ காமகோடிபீட ஸ்தாபன வரலாறு ஸ்பஷ்டமாகக் காண கிறது. ஆனால் அதை மறைத்துப் புது நூல்களும் அங்கங்கே பரவியிருக்கின்றன; ஆகையால் இவ்விஷயத்தில் நாம் எல் லோருமே விழிப்புடன் இருக்கவேண்டும்.

ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்ய வார்த்திகத்தில், முதல் அத்தியாயம் நான்காம் ப்ராஹ்மணத்தில் ஒரு ச்லோகம் வருகிறது. அது இந்தக் காலத்து நிகழ்ச்சிகளுக்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது என்பதைப் பார்த் தால் வியப்பாகத்தான் இருக்கிறது.

"प्रमादिनो बहिश्चित्ताः पिशुनाः कलहोत्सुकाः ।
संन्यासिनोऽपि दृश्यन्ते देवसंदूषिताशयाः ॥ 1584.

என்ற இந்த ச்லோகத்துக்கு, ஆனந்தகிரி டீகை அழகான விளக்கம் கூறுகிறது:—

"श्रवणादिषु मनस्समाधानवैधुर्यं प्रमादः। स च चेतसो बाह्यार्थप्रावण्ये हेतुः। तच्च परोत्कर्षासहिष्णुत्वकारणम्। तच्च कलहकुतूहलित्वे निदानम्। प्रमादे हेतुः देवादिभिरनाराधितैः दूषितधीत्वमिति विभागः॥"

அதாவது, "தேவதைகளை நியமத்துடனும் பக்தியுடனும் சரியாக ஆராதிக்காததனால் மனிதனுக்குப் புத்தி கெட்டுப்போகிறது. அதனால் அவனுக்கு ஆத்ம ச்ரவண மனனாதிகளில் மனம் நிலைப்பதில்லை. அப்பொழுது அவனுடைய சித்தம், வெளி விஷயங்களில் ஈடுபடுகிறது. அதனால் அவனுக்குப் பிறருடைய மேன்மையைப் பொறுக்க முடியாத தன்மை ஏற்படுகிறது. அதனால் அவனுக்குக் கலகம் செய்வதில் குதூகலம் உண்டாகிறது. இவ்விதம் ஸந்நியாஸிகளும் காணப்படுகிறார்கள்" என்பது இந்த வார்த்திகத்தின் பொருள்.

இதுபோன்ற கருத்தையே, ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்தில் 59-ஆம் அதிபதியாக விளங்கிய பகவந்நாம போதேந்த்ர ஸ்வாமிகள், தமது 'நாமாம்ருத ரஸோதய'த்தில் ஆறுவது உல்லாஸத்தில், இன்னும் தெளிவாக வெளியிட்டிருக்கிறார்:—

"यतयश्च विवरणादिपाठयितारः जगदीश्वरोपासनसामान्यहीनाः अमानित्वादिगुणसामान्यरहिताः अरिषड्वर्गैराक्रान्ताः प्रतिष्ठादिसंपादनपरा एव दृश्यन्ते ॥"

அதாவது, "விவரணம் முதலிய வேதாந்த க்ரந்தங்களைப் பிறருக்குப் பாடம் சொல்லும் யோக்கியதை இருந்தும், சில ஸந்நியாஸிகள் பரமேச்வரனை நன்கு உபாஸிக்காமல், பகவத்கீதையில் சொன்ன அமானித்வம் முதலிய குணங்களற்றவர்களாகவும், காம க்ரோதாதி அரிஷட்வர்க்கங்களால் ஆக்கிரமிக்கப்பட்டவர்களாகவும், ஸ்வப்ரதிஷ்டை முதலியவற்றைச் சம்பாதிப்பதிலேயே நோக்கமுடையவர்களாயும் காணப்படுகிறார்கள்" என்று கூறுகிறார்.

இப்படி வார்த்திகம் முதலிய வசனங்களுக்கு இலக்கான சில ஸந்நியாஸிகளின் தூண்டுதலினால்தான், 1873, 1875, 1881-ஆம் ஆண்டுகளில், சிவரஹஸ்யத்தில் புதியனவாகப் பல ச்லோகங்களைச் சேர்த்து அச்சடிப்பதென்ன, சித்விலாஸீய மென்ற நவீன சங்கரவிஜயத்தைக் கல்பித்து ப்ரசாரப்படுத்துவதென்ன, ஆனந்தகிரீய சங்கர விஜயத்தில் பாடங்களைப் பல விதமாக மாற்றி அச்சிட்டு வெளியிடுவதென்ன, இவைபோன்ற பல தப்புக் காரியங்கள் நடந்து வந்திருக்கின்றன என்று உறுதியிடத்தக்க பிரமாணங்கள் இருக்கின்றன.

" पण्डितैरर्थकार्पण्यात् पण्यस्त्रीभिरिव स्वयम् ।
आत्मा संस्कृत्य संस्कृत्य परोपकरणीकृतः ॥"

"பண்டிதர்கள் அர்த்தலோபத்தினால் பண்யஸ்த்ரீகளைப் போல, (பலவகைப் படிப்பு முதலியவற்றால்) விதம் விதமாகத் தம்மைப் பண்பாடும் அழகும் சிறக்கும்படியாக அலங்கரித்துக்கொண்டு, தமது ஆத்மாவைப் பிறருக்கு அடிமையாக்கினார்கள்" என்றும்,

" अर्थस्य पुरुषो दासो दासस्त्वर्थो न कस्यचित् "

"பணத்துக்கு மனிதன் அடிமை; பணம் எவனுக்கும் அடிமை யாகாது" என்றும் கூறியுள்ளபடி, பணத்தாசையினுல் ப்ராசீனமான க்ரந்தங்களில் எவ்விதமான பாடமாறுதல்களை யும் செய்யவும் புது சங்கரவிஜயங்களைக் கல்பிக்கவும் பண்டிதர்களும் துணிந்துவிடுகிருர்கள்.

ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஆசார்யர் களின் பரம்பரையில் 64-ஆம் பீடத்தை அலங்கரித்தவர் களான ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள், கி. பி. 1839-இல் காஞ்சீபுரத்தில் ஸ்ரீ காமாக்ஷிக்கு கும்பாபிஷேகம், 1846-இல் திருவானைக்காவில் ஸ்ரீ அகிலாண்டேச்வரிக்கு தாடங்க ப்ரதிஷ்டையும் செய்தார்கள். அவர்கள் காலத்தில் 1844-இல் ச்ருங்ககிரி சாரதாபீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளுடைய ஸ்ரீமடம் விசாரணை கர்த்தரான சேஷ ஜோஸ்யர் என்பவர், ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதிகளின்பேரில் தொடுத்த ஸ்ரீ அகிலாண்டேச்வரி அம்மன் தாடங்க ப்ரதிஷ்டையின் பாத்யவிஷயமான வ்யவ ஹாரங்கள் தோற்றுப்போயின. 'தாடங்க ப்ரதிஷ்டா பாத்யம் ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்துக்குத்தான் உண்டு; மற்ற மடங்களுக்கு இதில் ஸம்பந்தம் கிடையாது' என்று நீதிபதி கள் தீர்மானித்து ஐயந்திரிபறத் தீர்ப்புக் கூறினுர்கள்.

நீதிபதிகளின் இவ்விதத் தீர்ப்பினுலும் இன்னும் பல காரணங்களினுலும் சீற்றமும் பகையும் கொண்ட சிலர், ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீட ஸ்தாபன விஷயத்தை விவரிக்கும் ப்ராசீன க்ரந்தங்களை ஒருவாறு பாடபேதங்கள் செய்து அச்சிடவேண்டும், புதிய சங்கரவிஜயங்களை ப்ரசுரப்படுத்த வேண்டும் என்று ஸங்கல்பித்துக்கொண்டு, 1873, 1875, 1881 ஆகிய ஆண்டுகளில் சிவரஹஸ்யம், ஆனந்தகிரீய சங்கரவிஜயம் முதலிய பழமையான க்ரந்தங்களில்

பணத்தாசை கொண்ட பண்டிதர்களைக் கொண்டு பாட மாறுதல்கள் செய்வித்தும் புதிய சித்விலாஸீய சங்கரவிஜ யத்தை அவர்களைக் கொண்டு கல்பித்தும் அச்சிட்டுப் பிர சுரித்தார்கள். ஆயினும் ஆஸேது ஹிமாசலம்வரை இருக்கிற சிவரஹஸ்யம், ஆனந்தகிரீய சங்கரவிஜயம் முதலிய புஸ்த கங்களின் கையெழுத்து ப்ரதிகளைக் கவனித்து ஆராய்ந்த பொழுது பாடமாறுதல் செய்த உண்மை நன்குகத் தெரிந் தது. அர்த்தலோபமுற்ற பண்டிதர்களைக் கொண்டு சிலர் இவ்விதம் பாடமாறுதல்கள், புதிய க்ரந்த கல்பனங்கள் முதலியன செய்வித்து, ஸத்தியத்தை மறைக்கப் பார்த்தார் கள் என்ற உண்மையும் வெளியாயிற்று. ஆகையால் ப்ராசீன க்ரந்தங்களின் ப்ராசீன ப்ரதிகளை நன்கு பரிசீலனை செய்யும் ப்ராமாணிகர்கள் ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்தின் பழம்பெரும் மஹிமையை நன்குக அறிவார்கள் என்பது திண்ணம்.

ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடம் புராதனமானது; புதிய தல்ல. இதை நிரூபிக்கும் மறுக்கமுடியாத ப்ரமாணங் கள் நிறைய இருக்கின்றன. இப்படி இருந்தும், இந்தப் பீடத்தின் உத்கர்ஷத்தில் அஸூயை கொண்டும், ஜீவனார்த் தம் ஏராளமான தனலாபம் வருகிறதென்ற துராசையால் ஆகர்ஷிக்கப்பட்டும் யதார்த்த ஞானமில்லாத சில லௌகிகர் கள் பொய்க் கட்டுரைகள் நிரம்பிய புத்தகங்களை அச்சிட்டுத் துஷ்பிரசாரம் செய்து ஜனங்களை வஞ்சித்து வருவதாகத் தெரிவதனால், பொது ஜனங்கள் இத்தகையவர்களின் மாயவஞ்சனைகளுக்கு ஆளாகாமல், உண்மையை உள்ளபடி அறிந்து தெளிந்து, நம் ஆசார்ய சரணர்களிடம் அன்பும் பக்தியும் கனக்க வாழ்ந்து உயர்நிலை பெறவேண்டும் என் பதே நமது எண்ணம், நமது நோக்கம், நமது பிரார்த்தனை.

## வேண்டுகோள்

பகவத்பாதர்கள் ஸ்தாபித்த ஸ்ரீமடங்கள் விஷயத்தில் சிலர் வீண் சர்ச்சைகளைச் செய்து ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடத்தையே இல்லை யென்று ஸ்தாபிக்க ப்ரயத்னம் செய்து புஸ்தகங்களும் ப்ரசுரித்து வந்தபடியால் உண்மையை வெளியிட வேண்டி இந்தக் கட்டுரையை எழுதினேன். ஸ்ரீகாஞ்சீ ஸ்ரீமடத்தை இல்லையென்று ஸ்தாபிக்க ஒருகாலும் முடியாது என்பதை உறுதியாக்கினேன்.

'यथार्थवादी बहुजनविरोधी' ।

'உண்மையை உரைப்பவன் வெகு ஜனங்களுக்கு விரோதியாவான்' என்ற ந்யாயம் தெரிந்திருந்தும், உண்மையை விளக்கும் ஊக்கத்தில், தவிர்க்கமுடியாத சில வார்த்தைகளைச் சிலருக்குப் புண்படும்படியாக உபயோகப் படுத்தியிருந்தாலும் அவற்றை க்ஷமித்து, உண்மையை அறிந்து, அதை வெளியிட்டதற்காக என்னிடம் நன்றி பாராட்டிப் பொதுஜனங்கள் அநுக்ரஹிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

## சிவரஹஸ்யம் முதலிய 10 சங்கர சரித்திர க்ரந்தங்களில் கண்ட மடங்களைப் பற்றிய உண்மை

### (1) சிவரஹஸ்யம்

சிவரஹஸ்யம் மிகப் புராதன இதிஹாஸம். அதில் 9-ஆம் அம்சம் 16-ஆம் அத்யாயத்தில் சங்கராசார்ய சரித்ரம் கூறப்படுகிறது. அதில் ஆசார்யாள் கைலாஸத்திலிருந்து, யோகம், போகம், வரம், முக்தி, மோக்ஷம் என்ற ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கொண்டுவந்ததும், காஞ்சியில் ஆசார்யாளுக்கு ஒரு மடம் உண்டு என்பதும், காஞ்சியில் ஆசார்யாள் ஸித்தியடைந்த விவரமும் கூறப்படுகின்றன.

## (2) மார்க்கண்டேய ஸம்ஹிதை

மார்கண்டேய ஸம்ஹிதையில் கண்டம் 72-இல் ஆசார்ய சரித்ரம் கூறப்படுகிறது. அங்கு சிதம்பரத்தில் மோக்ஷ லிங்கம், கேதாரத்தில் முக்தி லிங்கம், நீலகண்டேச்வர க்ஷேத்ரத்தில் வரலிங்கம், காஞ்சீ காமகோடி பீடத்தில் யோக லிங்கம், ச்ருங்ககிரி சாரதா பீடத்தில் போகலிங்கமும், ஆசார்யாளால் ஸ்தாபிக்கப்பட்டன என்ற விவரமும், ஸுரேச்வராசார்யாள் காஞ்சீ மடத்திலும், பத்மபாதாசார்யாள் ச்ருங்ககிரி மடத்திலும் நியமிக்கப்பட்ட விவரமும், காஞ்சியில் ஆசார்யாள் ஸித்தியடைந்த விவரமும் கூறப்படுகின்றன.

## (3) ஆனந்தகிரி சங்கர விஜயம்

ஆனந்தகிரி சங்கரவிஜயத்திலும் மார்க்கண்டேய ஸம்ஹிதையில் கூறிய மேற்படி விஷயங்கள் எல்லாம் அப்படியே கூறப்படுகின்றன. மேலும் ஸுரேச்வரர் வஸிக்கும் காஞ்சீ மடத்தில் இந்த்ர ஸரஸ்வதி ஸம்ப்ரதாயம் என்ற விஷயமும் ஆசார்யாள் காஞ்சீ மடத்திலிருந்துகொண்டே சிஷ்யர்களைப் பலவிடங்களுக்கு அனுப்பி ஷண்மதஸ்தாபனம் செய்த விவரமும், ச்ருங்ககிரியில் சாரதாப்ரதிஷ்டை செய்து அங்கு பாரதீபீடஸ்தாபனம் செய்த விவரமும் கூறப்படுகின்றன.

## (4) பதஞ்சலி சரிதம்

ராமபத்ர தீக்ஷிதர் இயற்றிய பதஞ்சலி சரித காவ்யத்தில் ஆசார்யாளின் பரமாசார்யாளான கௌடபாதாசார்யாள் பூர்வாச்ரமத்தில் பதஞ்சலியினிடம் மஹா பாஷ்ய படனம் செய்த விவரம், ஆசார்யாளின் ஸாக்ஷாதாசார்யா

ளாயும், பதஞ்சலியின் அவதாரமுமான கோவிந்த பகவத் பாதாசார்யாளின் சரித்ரம், இரண்டும் விஸ்தாரமாகக் கூறப்படுகின்றன. ஆசார்யாளின் சரித்ரம் சுருக்கமாகக் கூறப்படும்பொழுது ஆசார்யாள் பாஷ்யப்ரணயனம் செய்து, திக் விஜயம் செய்து, காஞ்சியிலேயே தங்கிய விவரமும் கூறப்படுகின்றன.

## (5) சங்கராப்யுதயம்

ராஜ சூடாமணி தீக்ஷிதர் இயற்றிய சங்கராப்யுதயத்தில் ஆசார்யாள் காஞ்சியிலுள்ள வித்யாபத்ராஸனம் என்ற ஸர்வக்ஞபீடத்தில் ஏறிய விவரமும், பிறகு காஞ்சியிலேயே காமாக்ஷியைப் பூஜித்துக்கொண்டு ஆசார்யாள் வஸித்த விவரமும் கூறப்படுகின்றன.

## (6) வ்யாஸாசலீயம்

வ்யாஸாசலீய சங்கரவிஜயத்தில் ஆசார்யாளாகிற கல்பவ்ருக்ஷம், காஞ்சீ க்ஷேத்ரமாகிய இடத்தில் வேரூன்றி நான்கு ப்ரதான சிஷ்யர்களாகிய ஸ்கந்தங்களை நான்கு திக்குகளிலும் அந்த ஸ்கந்தங்களிலிருந்து உண்டான பல சிஷ்யர்களாகிய பல கிளைகளைப் பலவிடங்களிலும் பரவச் செய்து, இவ்விதம் பாரத தேசத்தில் வ்யாபித்துக் கொண்டு, ஜனங்களின் ஸம்ஸார தாபத்தை போக்கிக்கொண்டிருக்கிறது என்று நிரூபித்த முறையில் பாரத தேசத்தில் ஆசார்யாளுடைய மடங்கள் கணக்கில் அகப்படாது என்று ஸூசிக்கப் படுவதுடன் பல விடங்களில் பல மடங்களை ஆசார்யாள் ஸ்தாபித்ததாக ஸ்பஷ்டமாகவும் கூறப்படுகிறது. காஞ்சீ மண்டலமென்ற, காச்மீர மண்டலத்தில் உள்ள ஸர்வக்ஞ பீடத்

தில் ஆசார்யாள் ஏறிய விவரமும், காஞ்சியில் ஸித்தி யடைந்த விவரமும், நன்கு கவனிக்கும் பொழுது அங்கு வெளியாகிறது.

## (7) கோவிந்தநாதீயம்

கோவிந்தநாதீயமென்ற கேரளீய சங்கர விஜயத்தில் வ்யாஸாசலீயத்தைப் போலவே சங்கர சரித்திரம் வர்ணிக்கப் படுவதுடன், வ்யாஸாசலீயத்தில் கூறப்பட்ட ஸர்வக்ஞ பீடமுள்ள காச்மீரமண்டலம் காஞ்சிமண்டலம்தான் என்று ஸ்பஷ்டப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் கேரளத்தில் ஆசார்யாள் ஸித்தியடைந்ததாக அதில் கூறப்பட்டிருக்கிறது. அது சிவரஹஸ்யம் முதலிய மூல க்ரந்தங்களுக்கு விருத்த மானதால் ஏற்கத்தகுந்ததல்ல.

## (8) மாதவீயம்

மாதவீயசங்கரவிஜயத்திலும் ஆசார்யாள் பாரததேசத் தில் பலவிடங்களில் பல சிஷ்யர்களை நியமித்துப் பல மடங்களை ஏற்படுத்தினார்களென்று கூறப்படுகிறது. காச்மீர மென்று கூறப்படுகிற காஞ்சியில் ஆசார்யாள் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்த விவரமும், கூறப்படுகிறது. ஆனால் ஆசார்யாள் பதரி, கேதாரம் சென்று கைலாஸம் போய்விட்ட தாகக் கூறப்படுகிறது. அது மூலமான சிவரஹஸ்யம், ஆனந்தகிரீயம், சங்கராப்யுதயம் முதலியதற்கு விரோத மானதால் ஏற்கத்தகுந்ததல்ல. காஞ்சியிலேயே ஆசார் யாள் ஸித்தியடைந்ததுதான் உண்மை.

## (9) சித்விலாஸீயம்

சித்விலாஸீயமென்ற சங்கர விஜயமொன்றில் மட்டும் ஆசார்யாள் நாலு திக்குகளில் நான்கு மடங்களை, அதாவது,

ச்ருங்ககிரி-த்வாரகை-பதரீ, ஜகந்நாதம் என்ற க்ஷேத்ரங்களில் நாலு மடங்களை ஸ்தாபித்து விட்டு பதரியில் தத்தாத்ரேய குஹா ப்ரவேசம் செய்து கைலாஸம் போய் விட்டாரென்று கூறப்படுகிறது. ஸுரேச்வராசார்யாள் ச்ருங்ககிரி மடத்தில் ஸ்தாபிக்கப்பட்டார்களென்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆசார்யாளின் ஸர்வக்ஞ பீடாரோஹணம் காஞ்சியில் என்றே அங்கும் கூறப்பட்டிருக்கிறது. ஆசார்யாள் பாரத பூமியில் பல இடங்களில் பல மடங்களை ஸ்தாபித்திருக்க, 4 மடங்கள்தான் ஆசார்யாளால் ஸ்தாபிக்கப்பட்டனவென்று கூறுவதும், காஞ்சீமடத்தில் ஸுரேச்வராசார்யாளையும், ச்ருங்ககிரிமடத்தில் பத்மபாதாசார்யாளையும் ஸ்தாபித்திருக்க, அதற்கு விரோதமாகக் கூறுவதும், காஞ்சியில் ஆசார்யாள் ஸித்தியடைந்திருக்க, அதற்கு மாறுதலாகக் கூறுவதும், மூலக்ரந்தங்களுக்கு விருத்தமானதால் ஏற்கத் தகுந்தவையல்ல.

## (10) குருவம்ச காவ்யம்

குருவம்ச காவ்ய மென்ற, ச்ருங்ககிரிமடத்து ஆஸ்தான பண்டிதரியற்றிய சங்கரசரித்ரக்ரந்தத்திலும், சித்விலாஸீயத்தைப் போலவே 4-மடங்கள் தானென்பது முதலிய விஷயங்கள் கூறப்படுகின்றன. அதுவும் முன் கூறியது போல மூலக்ரந்தங்களுக்கு விருத்தமானதால் உண்மையல்ல.

ஆகவே சித்விலாஸீயம், குருவம்ச காவ்யம் என்ற ச்ருங்ககிரிமடத்தைச் சேர்ந்த சிலரால் நவீனமாக எழுதப்பட்ட இரு க்ரந்தங்களைத் தவிர பொதுவான பழைய எல்லா சங்கரவிஜயங்களையும் கவனிக்கும் பொழுது ஆசார்யாளால் பாரத பூமியில் பலவிடங்களில் பலமடங்கள் ஸ்தாபிக்கப்பட்ட விவரமும் காஞ்சியில் ஆசார்யாள் கடைசிக் காலத்தில்

தங்கி, அங்கு ஒரு மடம் நிர்மாணம் செய்த விவரமும் அந்த மடத்தில் ஸுரேச்வராசார்யாளை நியமித்த விவரமும் தெரிகிறபடியால் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்தில் ஆசார்யாள் காலம் முதல் அவிச்சின்னமாக வந்துகொண்டிருக்கும் குருபரம்பரையை ஸேவித்து ஸகல ச்ரேயஸ்களையும் அடையும் பாக்யம் ஆசார்யாள் பிறந்த த்ராவிடதேசத்துக்கே அஸாதாரணமாக ஏற்பட்டிருப்பது விசேஷமாகும்.

சுபம்.

